# வட்டமேஜை

சுற்றுலா வளர்ச்சிக் கழகம் வழங்கிய கையேடு, அனைத்து இடங்களையும் நேரில் சென்று பார்த்த மன நிறைவை அளித்தது.

**- இரா.சக்கரபாணி, மதுரை**

ப்ளஸ் டூ முடித்தவர்களுக்கு, யூ.பி.எஸ்.சி. பற்றிய ஆலோசனைகளைச் சரியான நேரத்தில் வழங்கியுள்ளது பாராட்டத்தக்கது.

**- என்.பாலசுப்பிரமணியன், சென்னை**

நமது பண்பாட்டுக்கு எதிரானவற்றைக் களையாவிட்டால், விளையாட்டு வினையாகி அளவில்லாத சேதங்களை ஏற்படுத்தும் என்ற தலையங்கம், அருமை.

**- ஜே.துரைராஜ், சென்னை**

ஷோபா சந்திரசேகரின் 'என் செல்ல தளபதி' + எஸ்.பி.முத்துராமனின் 'மனிதன் அனுபவங்கள்' = சுவை + விறுவிறுப்பு.

**- ஆர்.வி.கிருஷ்ணமூர்த்தி, சென்னை**

விக்கிரமன் - குந்தவை ஜோடிக்கு எத்தனை தாஜ்மஹால்கள் கட்டினாலும் போதாது என நிரூபித்துள்ளது பார்த்திபன் கனவு, மீண்டும்!

**- சாமி, திருவண்ணாமலை**

# எத்தனை தாஜ்மஹால் கட்ட?!

எத்தனை முறை படித்தாலும் சலிப்பு தட்டாத கல்கியின் நடை, காலத்தைக் கடந்தும் நிற்கும்.

**- ப.தர்ஷினி, குடந்தை**

'பார்த்திபன் கனவு' தொடர் மனத்தை விட்டு நீங்காத இடம் பிடித்து விட்டது.

**- டி.ஜி.நாராயணராவ், சென்னை**

## ஸ்பீட் போஸ்ட்

நித்தம் நடக்கும் ரத்தக் குளியல் அமெரிக்காவுக்கு சகஜமான ஒன்றுதான். நம்ம ஊரைப் பாருங்க. தலைவர் சிலைக்கு அவமரியாதை; கட்சி போர்டுக்கு செருப்பு மாலை என்று உதிரிக் கட்சிகளின் உபத்திரவம் தாங்க முடியவில்லையே!

**- இரா.கல்யாணசுந்தரம், அனுப்பானடி**

திரைக்கும், நிஜத்துக்குமிடையேயுள்ள வேறுபாட்டைப் புரிந்து கொள்ளும் பக்குவத்தை ரசிகர்களுக்கு ஏற்படுத்தி, திரைக் காட்சிகளில் மது, புகைப் பழக்கத்தைத் தவிர்க்கக் கோரும் தலையங்கம் சரியானது!

**- எஸ்.அன்புமணி, ஈரோடு**



# கிரேஸியைக்



# தித்திப்பு

**இனிப்பு எல்லாம் ரொம்ப சாப்பிடாதீங்க கிரேஸி சார்!**

● **ரா.பிரசன்னா, மதுரை**

*முத்தத்துக்கு ஒரு அழகான விளக்கம் தர முடியுமா?*

கொடுத்த கடனைத் திருப்பி வாங்க மேலும் மேலும் கொடுக்க வேண்டிய கடன், முத்தம். இந்த பிஸினஸில் ஸாரி, இந்த kissகனஸில் இன்று கடன் - நாளை ரொக்கம் கிடையாது. இன்றே கடன், இன்றே ரொக்கம். இல்லாத உணவை இலை போடாது, இதழால் இருவர் மட்டும் பரிமாறிக் கொள்ளும் மௌன-உண்ணா-விரதம். இத்தைத் தின்னால் இருவருக்கும் பித்தம் தெளியும். கைக்கு எட்டாதது; ஆனால் வாய்க்கு எட்டக் கூடியது. கைக்கு எட்டினால் அது சாதா flying-kiss ஆகி விடுமே. இதைத் தவிர, இன்னொரு அகலமான முத்தம் இருக்கிறது. பழங்கால வீடுகளில் பார்க்கலாம். முத்தத் தமிழில் ஸாரி, சுத்தத் தமிழில் இதை முற்றம் என்பார்கள். நீங்கள் இதைக் கேட்கல்லையே...?

● **கு.அருணாசலம், தென்காசி**

*எறும்புக்கு சர்க்கரை நோய் வந்தால்?*

சர்க்கரைக்குத்தான் எறும்பு வருமே ஒழிய, எறும்புக்கு சர்க்கரை வராது. பிறவியிலேயே எறும்பு ant-டி டயாபடீஸ்!

● **வெமூரியன், திருவண்ணாமலை**

*மனிதனுக்கு எட்டாத சிகரம் எது?*

ரமணர், ராமகிருஷ்ணர், ராகவேந்திரர் போன்ற மகான்களுக்கு எட்டிய ever-rest சிகரம்.

● **த.சத்தியநாராயணன், அயன்புரம்**

*உங்களுக்குப் பிடித்த காய் எது (அறுகாய் என்று சொல்லிக் கலாய்க்க வேண்டாம்)?*

இப்போ சத்திக்கு எனக்குப் பிடித்த காய், போன வாரம் எடுத்த சொக்காய். உடம்பை டைட்டாகப் 'பிடித்ததால்' டெய்லரிடம் ஆல்டர் பண்ணக் கொடுத்திருக்கிறேன்.

● **முருகன், மும்பை**

*ஏதாவது வேலை பாக்தா 'வெட்டி வேலை பாக்குறான்'னு கேலி பண்றாங்க. சரி போன்னு சும்மா இருந்தா, 'வேலை வெட்டி இல்லாத பய'ன்னு குத்திக் காட்டறாங்க. என்ன கொடுமை கிரேசி இது?*

கேலி செய்பவர்களுக்கும், குத்திக் காட்டுகிறவர்களுக்கும் இந்தப் பதிலைக்

## கேளுங்கள்

கூறுங்கள். திருநாவுக்கரசர் சுவாமிகள் தாம் சென்ற திருத்தலங்களிலெல்லாம், சிவகைங்கர்யமாக அந்தந்த கோயில் பிராகாரத்தில் முளைத்திருக்கும் புல், புதர்களை, தம் கையில் பிடித்த உழவாரப் படையினால் 'வெட்டி-வேலை' செய்து, சுத்தம் செய்திருக்கிறார். அதேபோல, 'வேலை'ப் பிடித்த முருகப் பெருமான், 'வெட்டியாக' சும்மா இரு என அருணகிரிநாதருக்கு உபதேசித்தார். சிங்கார வேலன் சொன்னபடி சும்மா வெட்டியாக இருந்த அருணகிரி, திருப்புகழ் சந்தத் தமிழ் சங்கினை முழங்கினார். 'வெட்டி'யானிடம் போகும் வரை எல்லாமே 'வேலை'தான்.

● **ராகினி, நெல்லை**
***உங்களுக்குப் பிடித்த பூ?***
எறும்புக்குப் பிடித்த தித்திப்'பூ'!






**கல்கி**

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர்:
**லக்ஷ்மி நடராஜன்**

கல்கி பில்டிங்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

வடிவமைப்பு :
**எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்**

தொலைபேசி :
044 - 4343 8888 (30 lines)

தொலைநகல் :
044 - 4343 8899

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com

விளம்பரப் பிரிவு :
marketing@kalkiweekly.com

சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com

பிற தகவல்கள் :
info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு :
ஒரு வருடம் : ரூ. 500/-
ஆறு மாதம் : ரூ. 270/-

வெளிநாடு *(விமானத்தபால்)* :
ஒரு வருடம் : ரூ.2,700/-

**Bharathan Publications Private Limited.**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

தேனாம்பேட்டை செனடாப் சாலையிலிருந்து பிரியும் சித்தரஞ்சன் சாலையில் இருக்கிறது அமைச்சர் ஸ்டாலின் வீடு. வீட்டுப் புல்வெளியில் தன் மகன் இன்பாவைக் கொஞ்சிக் கொண்டிருக்கிறார் ஸ்டாலின் மகன் உதயநிதி. ''இவர் இருக்காரே சாதாரண ஆளில்ல, தாத்தாவையே 'தளபதி ஸ்டாலின்' என்று கூப்பிடுவார்'' என்று மகனின் தலையை வாஞ்சையுடன் கோதுகிறார் உதயநிதி.

ரொம்பவும் சந்தோஷமாக இருக்கிறார் உதயநிதி. பின்னே இருக்காதா? 'குருவி' கமர்ஷியலாக ஹிட்டாகியிருக்கிறதே!

''வடசென்னை அகஸ்தியாவிலிருந்து தென் சென்னை பிரார்த்தனா வரை, ரசிகர்களோடு ரசிகனாக படம் பார்த்துவிட்டேன். செம வரவேற்பு'' என்று உற்சாகம் குரலில் கொப்பளிக்கிறது.

''பத்திரிகைகளில் விமர்சனங்கள் காட்டமாக இருக்கின்றனவே'' என்று நம் வேலையைக் காட்டத் துவங்கினோம்.

''மீடியாவை நாம் குறை சொல்ல முடியாது'' என்று மிகவும் எச்சரிக்கையுடன் மறுக்கிறார்! ''தரணி சார் தில், தூள், கில்லி என்று ஏற்கெனவே பட்டயக் கிளப்பியிருக்கிறார். அவரிடம் எதிர்பார்ப்பு இருக்கும். அதைத் தவிர்க்க முடியாது. ஒரு தயாரிப்பாளராக ஐ ஆம் வெரி ஹாப்பி.''

இதற்குள் கிருத்திகா உதயநிதி வருகிறார். ஆறு வருடங்கள் காதலித்து, பின்னர் கனிந்திருக்கிறது இவர்கள் திருமணம். 'குருவி' பட யூனிட்டைப் பற்றிப் பேச்சு திரும்புகிறது. ''தரணி ரொம்ப டயம் எடுத்துப்பாரே என்று பயமுறுத்தினார்கள். ஆனால், 'கன்'னா முடிச்சுட்டார், down to earth மனுஷன்'' என்று உதயநிதி முடித்தவுடன், ''சில சமயம் பேசும்போது ஐடியாஸ் கொடுப்போம். தரணி அதைத் தவறாக எடுத்துக் கொள்ள மாட்டார். யோசித்து பாஸிடிவ்வான விஷயங்களை எடுத்துக்கொள்ளும் மனப்பக்குவம் உள்ளவர்'' என்று கிருத்திகாவும் தரணி புகழ் பாடுகிறார். ஆனால், உதயநிதியை அசத்தியிருப்பவர் ஒளிப்பதிவாளர் கோபிநாத். ''சும்மா சொல்லக் கூடாது... இந்த ஆறு மாத காலம் அவர் சரியாகத் தூங்கியிருக்க மாட்டார். சதா 'குருவி' பட சிந்தனைதான். பூஜை போட்டவுடன், சம்பளம் அட்வான்ஸ் கொடுக்கலாம் என்று போனால், 'நோ' என்று வாங்க மறுத்துவிட்டார். எனக்குக் கொஞ்சம் அதிர்ச்சி. 'படம் முடியட்டும். ஹிட் என்று சந்தோஷச் செய்தியுடன் வாங்க. அப்புறம் வாங்கிக்கொள்கிறேன் என் சம்பளத்தை' என்று சொல்லிவிட்டார். ''மனிதர் ஜெம்'' என்கிறார் வியப்பு மேலிட. படம் முடிந்தவுடன் அதன் பிரம்மாண்டம் மற்றும் விஜய்யின் ஹீரோயிச காட்சிகளைப் பார்த்து பிரமிப்போடு ஒரு பயமும் வந்திருக்கிறது உதயநிதிக்கு.

தயாரிப்பாளராக வருவதற்கு முன்னர், ஸ்நோ போலிங், ரியல் எஸ்டேட் என்று வேறு தொழில்களையும் பார்த்திருக்கிறார். பின்னர் கழகப் பத்திரிகையான முரசொலியின் நிர்வாகம், இவர் பொறுப்பில் விடப்பட்டிருக்கிறது. படம் எடுப்பது என்று முடிவு எடுத்தவுடன் 'யாரைப் போடப் போறே?' என்று கேட்டவுடன், 'விஜய்' என்று சொல்லியிருக்கிறார் உதயநிதி. அதன் பிறகு ஸ்டாலின் எந்த வகையிலும் தலையிடவேயில்லையாம்.

# ஸ்டாலின் வீட்டு

# நிதியமைச்சர்

தாத்தாவிலிருந்து அந்த மெகா குடும்பத்தின் மாறன் சகோதரர்கள் உட்பட, சகல உறுப்பினர்களும் உதயநிதியை ஓஹோ என்று பாராட்டு மழையில் குளிர்விக்க, அடுத்த படத்துக்கான வேலைகளில் இறங்கிவிட்டார் அவர். கலாநிதிமாறன் கங்ராட்ஸ் சொன்னதில் மிகவும் திருப்தி உதயநிதிக்கு. அடுத்த படத்தில் விஷால் தான் ஹீரோ. விஜய், விஷால் மற்றும் உதயநிதி மூவருமே லயோலாவில் தோஸ்துகள்தான்.

அடுத்தது, 'இவரை அரசியல் களத்தில் இறக்க வேண்டியதுதானே' என்று கிருத்திகாவை வம்புக்கிழுத்தோம்.

''ஐய்யய்யோ... அதிலெல்லாம் நான் தலையிடுவது இல்லை. அவர் முடிவு செய்ய வேண்டிய விஷயம்'' என்று கிருத்திகா எஸ்கேப் ஆனார். வீட்டு நிர்வாகத்தைப் பொறுத்தமட்டில் கிருத்திகாதான் நிதியமைச்சர்.

கிருத்திகாவிடம் கேட்ட கேள்வியை உதயநிதியிடம் ரிபீட் செய்தோம்.

''அரசியல் சூழலில்தானே வளர்ந்தேன். 1996லிருந்து அப்பாவோடு தேர்தல் சுற்றுப் பயணம் போய்க்கொண்டிருக்கிறேன். அப்பா பேசும்போது நான் கூட்டத்தோடு கூட்டமா போய் நின்றுகொள்வேன். மக்களின் இதயத் துடிப்பை, பின்னர் அப்பாவிடம் சொல்வேன். அப்பாவுக்கு நேரமே இருக்காது என்பதால் அவர் போட்டியிடும் ஆயிரம் விளக்கு தொகுதியில் வீடு வீடாகப் போய் வாக்கு கேட்டிருக்கிறேன். தொகுதியில் எல்லா கழகப் பிரமுகர்களையும் நேரடியாகவே தெரியும். எதுவுமே திணிக்கக்கூடாது, இயல்பாக நடக்க வேண்டும். வாரிசு என்ற ஒரு காரணத்தால் மட்டுமே அரசியலில் நின்று நிலைத்துவிட முடியாது. கடும் உழைப்பும், அர்ப்பணிப்பும் தேவை'' என்று குட்டிச் சொற்பொழிவு நிகழ்த்துகிறார் உதயநிதி. (மைக் டெஸ்ட் எடுத்துடுங்



கப்பா!)

அன்றாடம் பத்திரிகைகளைப் பார்த்து, ஸ்டாலின் தொடர்பான செய்திகளை அவரது கவனத்துக்குக் கொண்டு செல்பவர் உதயநிதிதான். ஸ்டாலின் போக முடியாத பொது நிகழ்ச்சிகளுக்கும் திருமணங்களுக்கும் உதயநிதி சென்று நிறைவு செய்கிறார்.



'தாத்தா - அப்பா! இருவரிடமும் உங்களுக்குப் பிடித்த விஷயங்கள்?'

''தாத்தாவின் சுறுசுறுப்பும், தமிழும் என்னை அசத்தியிருக்கின்றன. அதேபோல அப்பாவிடம் நான் காண்பது உழைப்பு. கடும் உழைப்பு''

'ஒகே...ஒகே... அப்பா ஸ்டாலினைப் பற்றிச் சொல்லுங்கள்!'

''என் அம்மாவிடம்கூட ரகசியங்களைப் பகிர்ந்துகொள்ள மாட்டேன். அவர் கொஞ்சம் டென்ஷன் பார்ட்டி. ஆனால், அப்பாவிடம் சொல்வேன். என் காதல் விவகாரத்தை அவரிடம்தான் போட்டுடைத்தேன். உங்ககிட்ட தனியா பேசணும்னு என் காதல் விஷயத்தை நான் துவக்கிய போது, அவருக்கே கொஞ்சம் தயக்கம். 'அம்மாவும் இருக்கட்டுமே' என்றவரிடம், 'நோ... உங்களிடம்தான் பேச வேண்டும்' என்று அவரிடம் கிருத்திகா புகழ் பாடினேன். (கிருத்திகாவைப் பார்த்து சிரிக்கிறார்). எங்கள் குடும்பத்தில்தான் காதல் என்று துவங்கினாலே பச்சைக் கொடி தூக்கிவிடுவார்களே'' என்று சிரிக்கிறார்.

'படம் தயாரித்தாகிவிட்டது. இயக்குநராகும் ஆசை உண்டா?'

''ஒரு தயாரிப்பாளரா ஹாய்யாக இருப்பதை விட்டு, இயக்குநர் என்று மாட்டிக்கொண்டால் தாக்குப்பிடிக்க முடியாது சாமி'' என்று பட்டென்று வருகிறது பதில். தாத்தா படம் பார்க்கும் போது, பக்கத்தில் ஸீட் நுனியில் உட்கார்ந்து, 'என்ன சொல்லப் போகிறாரோ' என்று படபடப்புடன் காத்திருந்தார் உதயநிதி. ''நல்லா பண்ணிருக்காங்க'' என்று அந்த பீஷ்மர் சொன்னதும்தான் 'அப்பாடி' என்று ரிலாக்ஸ் ஆனார் உதயநிதி.

''ஆனால், இவர் இயல்பான சுபாவமே ரொம்ப கூலாக இருப்பதுதான். சில சமயம் அது ஒர்க் அவுட் ஆகும். பல சமயம் எரிச்சல் வரும்'' என்று சொல்லும் கிருத்திகா, எம்.ஓ.பி. வைஷ்ணவாவில் விஸ்காம் முடித்திருக்கிறார். பெரிய கார்ப்பரேட் நிறுவனங்களுக்கு 'ப்ரமோஷனல் ப்ரோஷர்' தயாரித்துக் கொடுக்கிறார்.

'கிருத்திகாவிடம் உங்களுக்கு மிகவும் பிடித்தது?' என்று அரதப் பழசான அந்தக் கேள்வியைக் கேட்டே விட்டோம்.

''ப்ளஸ், மைனஸ் கேட்கறீங்களா? ப்ளஸ் என்ன இருக்கிறது?'' என்று கிண்டலாக அவரைப் பார்த்துச் சிரிக்கிறார் உதயநிதி.

''வேண்டாம்பா...'' என்று கிருத்திகா 'உர்'ராக, ''அடிப்படையா பார்த்தா, நாங்க நல்ல நண்பர்கள். எதையுமே இவங்ககிட்ட டிஸ்கஸ் செய்ய முடியும். அது ஒரு நல்ல குவாலிட்டிதானே'' என்று உடனே சரண்டரானார் உதயநிதி.

வருடத்துக்கு ஒருமுறை ஸ்விட்ஸர்லாந்த், ஆஸ்திரேலியா என்று ஓய்வுக்காக குடும்பத்தோடு பறந்துவிடுகிறார் உதயநிதி. இந்தப் பேட்டியை நீங்கள் படித்துக்கொண்டிருக்கும்போது, அவரும் ஐரோப்பாவில் ஏதோ ஒரு மூலையில், இன்டர்நெட்டில், இதைப் படித்துக்கொண்டிருக்கக் கூடும்.

**- ப்ரியன்**

அட்டை மற்றும் படங்கள்:
அருண் சுகாகான்

# கலங்கி நிற்கும் கலைக் குடும்பம்!

தேவகி சமீபத்தில் காலமானார். முதுமையில் வறுமை என்கிற கொடிய சூழலில் இன்னொரு உயிர் உதிர்ந்தது.

இந்திய பாரம்பரியத்துக்கு ஈடு இணையற்ற வளம் சேர்த்த ஒரு குடும்பத்தின் மூன்றாவது தலைமுறைக்காரர் தேவகி. இந்த தேசத்துக்குக் கலைச் செல்வத்தை, ஆன்மிகச் சொத்தைப் பெருக்கி வைத்த ஓர் அம்பாள் உபாஸகரின் கொள்ளுப் பேத்தி - அவரது கொள்ளுத் தாத்தா, கர்நாடக சங்கீத மும்மூர்த்திகளுள் ஒருவரான சியாமா சாஸ்திரி!

தஞ்சாவூர் பங்காரு காமாக்ஷி கோவிலின் பரம்பரை குருக்களாக இருந்த குடும்பம் சாஸ்திரியுடையது. அவரது கீர்த்தனைகளின் உணர்ச்சிப் பெருக்கு, ஆன்ம விடுதலைக்கு ஏங்கும் இதயத்தின் கலை நயம் மிக்க கதறல்!

இன்று சியாமா சாஸ்திரி குடும்பத்தின் ஒரு கிளை வறுமையில் உழல்கிறது. தேவகியின் கணவர் வெங்கட்ராமன் திருமணமான மூன்றாம் மாதமே விபத்தில் இறந்துவிட, குடும்பம் நொடித்துப் போயிருக்கிறது. சங்கீதத்தில் ஆர்வமிருந்தும் வாய்ப்புகள் இன்றி கரண்டி தூக்கிய தேவகியால், உழைத்த அளவுக்குச் சேமிக்க முடியவில்லை. அவரது மகன் குமார், அரசு இல்லத்தில் சேர்க்கப்பட்டு வளர்ந்து, அவ்வப்போது எம்.ஜி.ஆரின் உதவி பெற்று குடும்பஸ்தரும் ஆகிவிட்டார். அவரும் கரண்டி தூக்கிவிட்டார். அவரது மகன் அஸ்வின் குமார், காஞ்சி சங்கர மடத்தில் வேதம் பயில அனுப்பப்பட்டிருக்கிறார். மகள் ஐஸ்வர்யாவின் படிப்பு பத்தாம் வகுப்போடு தடைப்பட்டு நிற்கிறது. சென்னை, சிட்லப்பாக்கத்தில் நடந்த தேவகியின் இறுதிச் சடங்குகூட, காயத்ரி அறக்கட்டளை என்கிற தன்னார்வத் தொண்டு நிறுவனத்தினால்தான் நிறைவேறியிருக்கிறது.



சியாமா சாஸ்திரி கீர்த்தனைகளால் வாழ்வில் வளம்பெற்றோர் இக்குடும்பத்துக்கு உதவ விரும்பலாம். உங்கள் உதவியை Aradhana Committee - Syama Sastry Family Fund என்ற பெயருக்கு, DD அல்லது காசோலையாக ஆராதனா கமிட்டி, 3, ராயல் என்கிளேவ், அடையாறு, சென்னை - 600 020 என்ற முகவரிக்கு அனுப்புங்கள். (அயல்நாட்டவர், **Aradhana Committee, 4, Cranberry Brook Drive, Millstone, NJ 07726** என்ற முகவரிக்கு அனுப்பலாம்.)

ஆராதனா கமிட்டி, அமெரிக்காவிலுள்ள கிளீவ்லேண்ட் நகரில், பல வருடங்களாக தியாகராஜ ஆராதனை நிகழ்த்தி வரும் அமைப்பு. அதன் நிறுவனர்களுள் ஒருவர் வி.வி.சுந்தரம், கிளீவ்லண்ட் சுந்தரம் என்றே அறியப்படுகிறார். (vvsundaram@hotmail.com).

குமார் குடும்பத்ினருக்கு வங்கிக் கணக்குகூட இல்லாத நிலையில், உதவிகளை இவ்வமைப்பு மூலம் அனுப்புதல் அன்பர்களுக்கு எளிதாக இருக்கும்.

செய்தி சேகரிப்பு:
**ப்ரியன்**



● சியாமா சாஸ்திரி

# விஜய் ஒரு ரோல் மாடல்!

**ஷோபா சந்திரசேகர்**



**சி**ல சமயங்கள்ல விஜய்யோட ரசிகர்கள் யாருக்காவது கல்யாணம் நடக்கறப்போ என்னையும் கூப்பிடுவாங்க. போவேன். மணமக்களை வாழ்த்தும்போது மறக்காம நான் சொல்ற வாசகம், 'விஜய்யை நீங்க ரோல் மாடலா எடுத்துக்கங்க!' அப்படிங்கறதுதான். ஏன்னா, விஜய் அவ்வளவு கடினமான உழைப்பாளி.

உழைப்புன்னா அப்படி ஒரு உழைப்பு. சினிமா ஃபீல்டே கஷ்டமான ஃபீல்டு. அதுல ரொம்பக் கஷ்டப்பட்டு உழைச்சாத்தான் முன்னுக்கு வரமுடியும். அவன் நைட்டும் பகலும் உழைக்கறதைப் பாத்து, எனக்கு நானே கண்ணீர் விடுவேன். சாவகாசமா எங்களோட பேசறதுக்கு மட்டும் இல்லை, ஆற அமர உக்காந்து சாப்பிடுவதற்குக்கூட அவனுக்கு நேரம் இருக்காது.

வெற்றிங்கிறது விஜய்யோட இலக்கா இருக்கு. மகாபாரதத்தில் அர்ஜுனனைப்

பத்திச் சொல்வாங்க. குரு துரோணாச்சாரி யார் மரத்து மேல உக்காந்திருக்கிற ஒரு பறவை மேல அம்பு எய்யச் சொல்வார். அர்ஜுனன் கண்ணுக்கு அந்த மரம், கிளை, பறவை எதுவுமே தெரியாது. பறவையோட கண் மட்டும்தான் தெரியும். அம்பு விடுவான். பறவை அடிபட்டு விழுந்துடும். அது மாதிரிதான் விஜய்யும். அவனுக்கு உழைப்பு ஒண்ணுதான் இலக்கு. அதனால தான் விஜய்யை ரோல் மாடல்னு சொல்றேன். இந்த மாதிரி இலக்கை நிர்ணயம் செஞ்சுக்கிட்டு பயணம் செஞ்சா, எந்த மனிதனும் லட்சியத்தை அடைஞ்சிடுவான்.



யதார்த்தத்துல விஜய் ரொம்ப சாது. அமைதின்னா அப்படி ஒரு அமைதி. ஷூட்டிங் முடிச்சு வீட்டுக்கு வருவான். கூடப் போன காஸ்ட்யூமர், டிரைவர், மேக்கப்மேன் எல்லோரும் சொல்வாங்க, ''இன்னிக்கு ஃபைட் சீன்மா. தம்பியை என்னவோன்னு நினைச்சோம். பயங்கரமா ஃபைட் பண்றாரு; பின்னி எடுக்கறாரு! இவ்வளவு திறமை இவருக்குள்ள இருக்கான்னு நினைக்க நினைக்க ஆச்சரியமா இருக்கு.'' இதையெல்லாம் கவனிக்காம தலையக் குனிஞ்சு, விஜய் தோசை சாப்பிட்டுக்கிட்டு இருப்பான். செட்ல நடிக்கறதுக்கும் அவன் வாழ்க்கைக்கும் சம்பந்தமே இருக்காது. அதிரடியான படங்கள்ல நடிச்சுட்டு, வீட்டுல குழந்தையை முதுகுலே ஏத்தி வச்சுக்கிட்டு யானை விளையாட்டு விளையாடிக்கிட்டு இருப்பான். பாக்கற நமக்குத்தான், 'திருப்பாச்சில நாலுபேரைத் தூக்கிப் போட்டுப் பந்தாடின விஜய்யா இது?!'ன்னு இருக்கும். முதல் படத்துலயே கிளைமாக்ஸ்ல அதிரடி ஃபைட் அவனுக்கு அமைஞ்சு போச்சு.

ஸ்கூல்ல ஃபுட்பால், பேஸ்கட் பால் எல்லாம் நல்லா விளையாடுவான். ஆனா, ஜிம்னாஸ்டிக்ஸ் அவனுக்கு ரொம்ப நல்லா வந்துச்சு. கட்டில்ல சாதாரணமா வந்து உக்காரவே மாட்டான். ஒரு பல்டி, இல்லன்னா ஒரு ஜம்ப். நமக்கு திடுக்குன்னு இருக்கும். அப்படி ஏறி உட்காரும்போது அடியெல்லாம் பட்டிருக்கு.

அதேமாதிரி அவனுக்கு என்னைப் பயமுறுத்தறது ஒரு பொழுதுபோக்கு; விளையாட்டு. ஸ்கூல் முடிஞ்சுதா? எல்லாப் பிள்ளைகளும் எப்படி வீட்டுக்கு வருவாங்க? வாசல்வழியாத்தானே? ஆனா, விஜய் அப்படி வரமாட்டான்.

வீட்டுக்குப் பின்பக்கமா வந்து, குழாயைப் பிடிச்சுக்கிட்டு மேல ஏறி, எகிறிக் குதிச்சு வீட்டுக்குள்ள வருவான். சத்தம் கேக்காம மெதுவா நடந்துவந்து என் பின்னால நின்னு, ''பே!''ன்னு கத்துவான். நான் அலறியடிச்சுத் திரும்பிப் பார்ப்பேன். முதல்ல திட்டணும்போலத் தோணும். ஆனா, அவன் முகத்தைப் பாத்தா திட்டத் தோணாது. சிரிச்சுடுவேன்.

அட்டகாசம் பண்ணுவான். ஆனா



## என்ன பரிசு?

சரியான விடைகளுடன் வரும் முதல் 10 கூப்பன்களுக்கு விஜய் படம் பொறித்த டி-ஷர்ட்... குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்படும் 100 அதிர்ஷ்டசாலிகளுக்கு விஜய் கையெழுத்திட்ட ஸ்டில்ஸ்...



அதனால யாருக்கும் பாதிப்பு அதிகம் இருக்காது. அப்போல்லாம் நானும் என் கணவரோட நிறைய நாள் ஷூட்டிங் போயிடுவேன். சில சமயங்கள்ல வெளியூர் போக வேண்டியிருக்கும். அங்கேயே தங்கவேண்டியிருக்கும். என்னோட மாமியார்தான் விஜய்யைப் பாத்துப்பாங்க. அவனுக்கு வேணுங்கறதையெல்லாம் குடுத்து, ரொம்ப அன்பா கவனிச்சுப்பாங்க.

ஆனா, விஜய் அவங்களையே ஏமாத்திடுவான். ஒரு நாள் அவங்க தூங்கினதுக்கப்புறம் பெட்ல தலைகாணியை வச்சு, போர்வையைப் போத்தி, ஆள் படுத்திருக்கறமாதிரி செட்டப் பண்ணிட்டு, செகண்ட் ஷோ போயிருக்கான்.

ராத்திரியில எழுந்து வந்தவங்க, விஜய்யைக் கூப்பிட்டிருக்காங்க. பதில் வராமப் போனதும் தொட்டு எழுப்பிப் பாத்திருக்காங்க. படுக்கையில் விஜய் இல்லை. ரொம்ப பயந்துட்டாங்க. அதோட அவங்க விட்டுடலை. நாங்க ஊர்ல இருந்து திரும்பி வந்ததும் என்கிட்டயும் அவர்கிட்டயும் சொன்னாங்க. அப்புறம்?

எழுத்து வடிவம் : **பாலு சத்யா**

**(தொடரும்)**

**ஹ**லோ வாசகர்களே!

**ஷோபா சந்திரசேகர் எழுதற, 'என் செல்ல தளபதி' தொடர் அசத்தலா இருக்குதானே? நீங்களும் சும்மா அசத்தறீங்க இல்ல. முதல், இரண்டு வாரப் போட்டிக்கு மளமளன்னு என்ட்ரீஸ் குவியுது!**

● முதல் போட்டிக்கான முடிவுகள் அடுத்த இதழில் வெளியாகும்.

● பதிமூணு வாரமும் அதிரடிப் போட்டி தொடரப் போகுது. ஒவ்வொரு வாரமும் பரிசு! பதிமூன்றாவது வாரம் பம்பர் போட்டி, வியப்பான மெகா பரிசுகள்!

● நீங்க செய்ய வேண்டியது ரொம்ப சிம்பிள்! ஒவ்வொரு வாரமும் ஐந்து கேள்விகள் கேட்போம். அதுல ஒண்ணு தொடரிலிருந்து வரும். சரியான விடைகளை 'டிக்' அடிச்சு கூப்பனையும் நிரப்பி, அந்தப் பக்கத்தைக் கத்தரிச்சு அனுப்பணும்.

● ஒருவரே எத்தனை கூப்பன் வேணும்னாலும் அனுப்பலாம். ஆனா ஜெராக்ஸ் கூடாது. எவ்வளவு வேகமா அனுப்பறீங்களோ அந்தளவுக்குப் பரிசு பெற சான்ஸ் இருக்கு. ஸோ, க்விக்!

● வெய்ட்! பதிமூன்றாவது வார பம்பர் போட்டியில நீங்க கலந்துக்கணும்னா 'விஜய்' ஸ்டில் போட்ட 'தொடர் சங்கிலி கூப்பனை' பத்திரமா சேகரிக்கணும். (இந்த வாரம் 11-ஆம் பக்கம் இருக்கு)

● பதிமூன்றாவது வார போட்டியோடு தொடர் சங்கிலி கூப்பன்கள் அனைத்தையும் இணைச்சு அனுப்பணும். ஒரு கூப்பனை 'மிஸ்' பண்ணினாலும், நீங்க அந்த வியப்பான பரிசுகளை 'மிஸ்' பண்ணிடுவீங்க.

● இந்த பதிமூன்று வாரத்தில் உங்களுக்கு ஒரு இதழ் கிடைக்காமப் போனாலும், உடனே எங்களுக்கு ஃபோன் பண்ணுங்க.




உங்க நகரத்து ஏஜண்ட் மூலமா கிடைக்க உதவி செய்யறோம். லோ, டயல் : 4343 8888

● போட்டி குறித்த இறுதி முடிவுகளில் ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

● போட்டியில் கலந்துக்கங்க; பரிசுகளை அள்ளுங்க!

# இந்த வாரக் கேள்விகள்!

**கடைசி தேதி : 29.05.2008**

1. விஜய்க்கு ரொம்ப பிடிச்சது எது?
   - ☐ ஐஸ்கிரீம்
   - ☐ ஃபைவ் ஸ்டார் சாக்லெட்
2. விஜய்-அஜீத் இணைந்து நடித்த படம்?
   - ☐ ராஜாவின் பார்வையிலே
   - ☐ ஃப்ரண்ட்ஸ்
3. விஜய் வக்கீலாக நடித்த படம்?
   - ☐ சிவகாசி
   - ☐ தமிழன்
4. 'என்ன அழகு... எத்தனை அழகு' பாடல் இடம்பெற்ற படம்?
   - ☐ லவ் டுடே
   - ☐ செல்வா
5. 'மின்சார கண்ணா' படத்தில் விஜய்யின் தந்தையாக வருபவர் யார்?
   - ☐ ரகுவரன்
   - ☐ மணிவண்ணன்

பெயர் : .................................................... வயது : ..........

முகவரி : ....................................................................

.............................................................................

செல் : ............................ இ.மெயில் : ..............................

போட்டி கூப்பன் அனுப்ப வேண்டிய முகவரி :

**விஜய் வின்னர்ஸ் போட்டி - 3,**

கல்கி, 47-NP, ஜவாஹர்லால் நேரு ரோடு,

ஈக்காடுதாங்கல், சென்னை - 600 032




# கல்கி



**2008 மே 25**
**ஸர்வதாரி வைகாசி 12**
**மலர் : 66**
**இதழ் : 43**


தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - *பாரதியார்.*

## நெஞ்சில் உரமுமின்றி நேர்மைத் திறமுமின்றி...

**ல**ஞ்ச ஒழிப்பு - கண்காணிப்புத் துறை (DVAC) என்பதாக ஒன்று நிறுவப்பட்டபோதே, அதன் வெற்றிகரமான செயல்பாடு குறித்துச் சந்தேகங்கள் எழுப்பப்பட்டன. ஏற்கெனவே உள்ள சட்ட திட்டங்களும் காவல் அமைப்புகளுமே ஊழலைக் கண்டுபிடித்துத் தண்டிக்கப் போதுமானவைதான். அவை ஊழலை ஒழிப்பதற்குப் பதிலாக, ஊழலுக்குத் துணைபோவதுதான் பிரச்னை என்பது சுட்டிக் காட்டப்பட்டது. இப்போது ஊழல் ஒழிப்பு - கண்காணிப்புத் துறைக்கும் அதே கதி நேர்ந்துள்ளது!

இத்துறை இயக்குநர் உபாத்யாயாவுக்கு ஃபோன் செய்ததாக ஒப்புக்கொண்டிருக்கிறார், தமிழக சமூக நலத்துறை அமைச்சர் பூங்கோதை ஆலடி அருணா. ஆனால், தமது உறவினர் பேரிலான லஞ்ச ஊழல் குற்றச்சாட்டைக் குறித்து தகவல் பெற மட்டுமே ஃபோன் செய்ததாகவும் அந்நபரைத் தப்புவிக்க, தமது செல்வாக்கைப் பயன்படுத்தவில்லை என்றும் கூறுகிறார்.

ஆனால், ஒட்டுக்கேட்டுப் பதிவு செய்யப்பெற்று வெளியிடப் பட்டுள்ள தொலைபேசி உரையாடலின் எழுத்தாக்கம், அமைச்சர் தமது உறவினருக்காகப் பரிந்துரைத்ததைத் தெளிவாக உணர்த்துகிறது.

தமது உறவினர் ஜவஹர் மீதான நடவடிக்கை குறித்து விசாரிப்பதுகூட தார்மிக ரீதியில் தவறுதான் என்பதை உணர்ந்து அமைச்சர் ராஜினாமா செய்துவிட்டார்.

அமைச்சரது விசாரிப்பை இயக்குநர் உபாத்யாயா ஏன் அனுமதிக்க வேண்டும்? தமது அதிகாரத்தில் - அதிலும் ஊழல் ஒழிப்பு-

ஜெய்ப்பூர் தொடர்குண்டு வெடிப்பு
பாக். ஊடுருவல்
இஸ்லாமிய பயங்கர வாதம்
உளவுத்துறை மெத்தனம்
கண்டனங்கள்
அரசின் தொலை நோக்கு இன்மை
வங்கதேச பயங்கரவாதிகள் கைவரிசை
இந்திய இஸ்லாமிய சமூகத்தினரின் மௌனம்
அரசியல் தீர்வு நாடாத அலட்சியப் போக்கு




கண்காணிப்புத் துறைச் செயல்பாட்டில் தலையிட யாருக்கும் உரிமை இல்லை என்பதுடன், அதன் செயல்பாடுகள் ரகசியமானவை என்பதை அவர் அமைச்சரிடம் வலியுறுத்தியிருக்க வேண்டாமா? மாறாக, அமைச்சர் கேட்டதற்கும் கூடுதலான விவரங்களை இயக்குநர் அளித்ததையே தொலைபேசி உரையாடல் உணர்த்துகிறது. ஜவஹரைத் தப்புவிக்க அவர் மறைமுகமாக யோசனை வழங்கியுள்ளதாக நம்புவதற்கும் இடமிருக்கிறது!

அப்படியானால், ஊழல் ஒழிப்பு - கண்காணிப்புத் துறை, அதனை ஒழிப்பதற்குப் பதிலாகப் பாதுகாத்து வளர்க்கிறது என்றுதானே கொள்ள வேண்டியிருக்கிறது! 'ஒட்டுக்கேட்டு அறியப்பட்ட இந்த ஒரு செய்தியைப் போல் இன்னும் எத்தனை அநீதிகளோ?' என்று கவலைகொள்ள வைக்கிறது.

தமிழக முதல்வர், அமைச்சருடைய செயல்பாடைக் கண்டித்தபோதிலும் அவரது ராஜினாமாவை ஏற்காமலிருப்பது விசித்திரமாக உள்ளது. ஏற்கெனவே வெளியான ஒட்டுக்கேட்கும் சம்பவம் (இதில் லஞ்ச-ஊழல் குற்றச்சாட்டு ஏதுமில்லை) குறித்த நீதிபதி விசாரணையில், அமைச்சர் பூங்கோதை விவகாரத்தையும் சேர்த்துக்கொள்ள இருப்பதாக முதல்வர் தெரிவித்துள்ளார். இது தாமதத்துக்கே வழி வகுக்கும்.

டி.ஆர்.பாலு பேரிலான குற்றச்சாட்டுகளுக்கு முதல்வர் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. இவையெல்லாம் கட்சி விரோத நடவடிக்கைகள் என்று அவருக்குத் தோன்றவில்லை! ஆட்சி மீது படிந்துள்ள கறைகள் என்று அவர் கருதவில்லை!

அரசியல் தலைவர்கள், பொது வாழ்வில் இருப்போர், சந்தேகத்துக்கப்பாற்பட்டவர்களாக இருக்க வேண்டும் என்கிற நிலைமை போய், 'என்ன சந்தேகம் வேண்டுமானாலும் எழட்டும். ஆட்சி நம்மிடம் இருக்கும் வரை சட்டத்தால் ஒன்றும் செய்ய முடியாது; நமக்கு முழு பாதுகாப்புதான்' என்கிற மனோநிலை வேரூன்றிவிட்டது.

இதன் காரணமாகத்தான், அழகிரி மற்றும் பன்னிரண்டு பேர் கிருட்டிணன் கொலை வழக்கிலிருந்து விடுவிக்கப்படுகிறபோது, அந்தச் சம்பவம் ஒரு கொண்டாட்டமாக மாறுகிறது. 'அப்படியானால், யார்தான் கிருட்டிணனைக் கொன்றார்கள்?' என்கிற சங்கடமான கேள்வி எழுப்பப்படுவதேயில்லை!

லஞ்ச-ஊழலில் ஈடுபடும் அரசியல்வாதிகளும் சரி, அவர்களுக்குத் துணை போகும் அதிகாரிகளும் சரி, நேர்மைத் திறமின்றி இயங்குவார்களேயானால், ஆயிரம் லஞ்ச ஒழிப்புத் துறைகள் இருந்தும் பயனில்லை! ●





# அரசாங்கம்

பன்ச் டயலாக் இல்லை; அரசியல் வாடை வீசும் வசனங்கள் இல்லை; நெளிய வைக்கும் ஹீரோயிசம் இல்லை; ஆகாயத்தில் பறக்கும் அடிதடிகள் இல்லை... இத்தனை இல்லைகள் இருக்கும், ஆச்சர்யம் விஜயகாந்தின் நூற்றைம்பதாவது படம்.

கதை என்னவோ அதே அரதப் பழசு தான். ஆனால், சொல்லிய விதத்தில் வித்தியாசப்படுகிறார் இயக்குநர் மாதேஷ். காட்சிக்குக் காட்சி 'அட' போட வைக்கும் திருப்பங்கள். அடுத்து என்ன... அடுத்து என்ன? என்று ஆவலைத் தூண்டும் திரைக்கதை!

நண்பன், வில்லன் என இரண்டு வேடங்களில் இதயம் நுழைகிறார் பிஜு மேனன். ரகுவரனுக்குப் பிறகு ராயல் லுக் வில்லன். அதிலும் சஸ்பென்ஸ் வைத்து இன்டர்வெல்லில் என்ட்ரி ஆகும்போது அதிர வைக்கிறார்!

ஹீரோயின் ஷெரில் பிரிண்டோ, எப்பொழுதும்போல அடக்க ஒடுக்க கதாநாயகி. விஜயகாந்த்தும் - ஷெரிலும் அறிமுகமாகும் காட்சி, காதல் கபடி! ஆடுகிறார்; பாடுகிறார்; பிறகு விஜயகாந்த்துக்காகச் செத்துப் போகிறார்.

வில்லனைத் தேடி கதை கனடாவுக்கு நகரும்போது பிடிக்கும் சூடு, கடைசி வரை தகிக்கிறது!

கனடா போலீஸாக வரும் நவ்னீத் கவுர், இளமைப் பட்டாசு; கல்லூரி இளைஞர்களை தீவிரவாதத்துக்கு அழைக்கும் வில்லனாக ராகுல்தேவ்; தன் மனைவி கண்ணீர் சிந்த, திருந்துவது, சென்டிமென்ட் டச்.

ஏ.வெங்கடேஷின் ஒளிப்பதிவு 'ஏ' கிளாஸ். இடிந்த கட்டடம்கூட கவிதையாகத் தெரிகிறது.

ஆன்டனியின் எடிட்டிங்கில் ராஜீவனின் கலை, ஜீவனோடு இருக்கிறது. சண்டைக்காட்சிகளை ரணகளமாகக் கொடுத்திருக்கும் ராக்கி ராஜேஷுக்கு சபாஷ். பாடல்களில் கோட்டை விடும் ஸ்ரீகாந்த் தேவா, பின்னணி இசையில் கோட்டை கட்டுகிறார்! கபிலன், பா.விஜய் பாடல் வரிகள் மனதில் ஒட்ட மறுக்கின்றன.

அரசாங்கம் - அசராத வேதாளம்!

- கபிலன்

# 'ம்மா...' என்றொரு சொல்..!

ஒரு மணி நேர பேருந்துப் பயணம் திடீரென தடைப்பட்ட போது தூக்கத்திலிருந்து விழித்தான் சதாசிவம். பேருந்து மூச்சிறைத்து நின்று மீண்டும் உயிர் பெற மறுத்ததில், ஆளாளுக்கு டிரைவரை நொந்து கொண்டு கீழிறங்கினர்.

மாற்றுப் பேருந்துக்கு மணிக்கணக்காகும் என்ற கண்டக்டரை வசவு மழை நனைத்தது.

அங்கிருந்து பத்து கல் தொலைவுதான் சதாசிவத்தின் கருக்கங்குடி. பஸ்ஸுக்காக காத்திருக்கும் நேரத்துக்குப் பதில், நடந்து சென்றால் இரண்டு மணி நேர நடைதான்! குறுக்குப் பாதை ஏதும் இருக்குமா என யோசித்தான்.

அருகிலிருந்த ஒற்றை கீற்றுக் கொட்டகை டீக் கடையில் விசாரித்தான். பஸ் பிரேக் டவுன் ஆகியதில் வந்திறங்கிய எதிர்பாரா வாடிக்கையாளர்களால் டீக் கடை மனிதர் பரபரத்துக்கொண்டிருந்தார்.

''மேற்கே அடுத்ததா வர்ற செம்மண் பாதையிலே போங்க!'' சதாசிவம் முகத்தைக் கூடப் பார்க்காமல் அவசரமாய் டீ ஆற்றிக் கொண்டே சொன்னார்.

கணநேர யோசிப்பில், அங்கே காத்திருப்பது உசிதமெனப்படவில்லை. நடக்க ஆரம்பித்தான். கடைக்காரர் சொன்னது போலவே செம்மண் பாதை வந்தது. இருபுறமும் கதிர் முற்றிய வயல்வெளி. சூரியனை மேகம் மறைத்ததில் எதிர்வெயில் விழாமல் சுகமளித்தது.

சிறிது தூரம்தான் நடந்திருப்பான். சிக்கல் தொடங்கியது. பாதை இரண்டாகப் பிரிந்ததில், எந்தப் பக்கம் போவதெனத் தெரியாமல் தடுமாறினான். தூரத்தில் ஒருவர் சைக்கிளில் வருவதைப் பார்த்து அவர் நெருங்கி வரும் வரை காத்திருந்து விசாரித்து, அவர் கைகாட்டிய பாதையில் நடக்க ஆரம்பித்தான்.

இரு வழி, மும்முனைப் பாதைகள் என்று பிரிந்த போதெல்லாம் குழப்பம் ஆட்டுவித்தது. எந்தப் பாதையில் செல்வதென விசாரித்து விசாரித்து நடந்ததில் சலிப்புத் தட்டியது.



பாதைதான் நீண்டு கொண்டிருந்ததே தவிர, ஊரை நெருங்க முடியவில்லை. நேரம் ஓடிக் கொண்டிருந்தது. இத்தனை ஆண்டுகளில் எத்தனையோ வழிகளில் தன் ஊருக்கு வந்திருந்தாலும், அந்தக் குறுக்குப் பாதை மட்டும் அவனுக்கு முற்றிலும் புதிதாக இருந்தது.



வயல்வெளியும் கருவேலங்காடும் மாறி மாறி வந்து வாழ்வின் முரணை முன்னிறுத்தியது அவனுக்கு. இடையிடையே சிறு சிறு குக்கிராமங்களுடன் வளைந்து வளைந்து பாதை ஊர்ந்துகொண்டிருந்தது.

நடப்பதற்கு அஞ்சாத அவனுக்குப் பாதையின் வளைவுகளும் பிரிவுகளும் கலக்கத்தை ஏற்படுத்தியதில், தெரியாத வழியில் போக முடிவெடுத்தது எவ்

வளவு பெரிய மடத்தனம் என்பதை உணர்ந்தான்.

ஒரு வழியாக விசாரிப்புகள் முடிந்து அவன் ஊர் எல்லையைத் தொட்டபோது, வானம் கறுப்புநிறம் பூசிக் கொண்டிருந்தது. நடையில்



வேகம் கூட்டி விறுவிறுவென வீட்டை நெருங்கினான்.

''அப்ப நாங்க வர்றோம்ங்க!'' திண்ணையில் அமர்ந்திருந்த அவர்கள் வள்ளியிடம் விடைபெற்றுக்கொண்டு எழுந்து நிற்கவும், அவன் வந்து சேரவும் சரியாக இருந்தது.

''வணக்கம்... வாங்க! வாங்க!'' அவர்களுக்குக் கைகூப்பியபடி வந்தவனைக் கண்டு முகம் மலர்ந்தார்கள்.

''அடடே... வந்துட்டீங்களா?'' என்றார் ஒருவர்.

''என்ன இந்த நேரத்திலே...'' விவரம் என்னவாயிருக்கும் என இழுத்தான் சதாசிவம்.

''இப்பத்தான் உங்க வீட்டுக்காரம்மாகிட்டே விஷயத்தை விலாவாரியா சொன்னோம்.''

சதாசிவம் தன் மனைவி வள்ளியைப் பார்த்தான்.

''லட்சுமியக் காணோமாங்க'' என்றாள் அவள்.

''என்னங்க சொல்றீங்க?'' என அதிர்ச்சியுடன் அவர்களிடம் திரும்பினான்.

''ஆமாங்க, நாங்க இங்கே உங்ககிட்டே அந்த மாட்டை வாங்கிக்கிட்டுப் போனதிலே இருந்து அது சரியாகவே இல்லே. வக்கே வச்சாலும் திங்கலே, புல்லு

## கொற்றவன்

வச்சாலும் திங்கலே! அது கண்ணுலேர்ந்து தாரை தாரையாய்த் தண்ணி வடிஞ்சிக்கிட்டே இருந்துச்சு. சரி, போகப் போகச் சரியாயிடும்னு பார்த்தா, நாலு நாளா பட்டினியாவே கெடந்துடுச்சு. பார்க்கவே ரொம்ப பரிதாபமா போயிடுச்சு. வெளியிலே போய் மேய்ஞ்சுட்டு வரட்டுமேன்னு நம்ம வேலைக்கார பயலோட அனுப்பினேன். அவனுக்குப் போக்கு காட்டி அந்த மாடு எங்கேயோ போயிடுச்சுங்க. நாங்களும் இந்த ரெண்டு நாளா சுத்து வட்டாரமெல்லாம் தேடிப் பார்த்துட்டோம். மாடு அகப்படலே!'' என நிறுத்தினார்

## ஜீவா பேசுகிறார்

"தெனாவட்டு படத்துல முதன்முதலா கிராமத்து இளைஞனா நடிக்கறேன். சிட்டியில பிறந்து வளர்ந்த எனக்கு, இது வித்தியாசமான அனுபவம். சாதுவா சென்னைக்கு வர்ற 'கோட்டைச் சாமி'யை, இங்க நடக்கற சமூக விரோதச் செயல்கள், நக்கீரனா மாத்துது. சமூகத்துல நடக்கற மனித நேயமற்ற செயல்கள் மீது ஒவ்வொரு இளைஞனுக்கும் கோபம் இருக்கும். ஆனா, நடைமுறையில தட்டிக் கேட்க முடியாது. அப்படிக் கோபப்பட்டு எரிஞ்சு போற தீக்குச்சி கிடையாது கோட்டைச் சாமி, இவன் தீப்பந்தம். தீமை எங்கு நடந்தாலும் தீச்சுடுவான். இந்தப் படம் என்னை ஒரு கமர்ஷியல் ஹீரோவாக ரசிகர் மனசுல உட்கார வைக்கும்.

இந்தப் படத்துல ரேவதிங்கற திருநங்கை நடிக்கறாங்க. தேர்ந்த நடிப்பைத் தந்திருக்கும் அவங்களும் இந்தக் கதையில் ஒரு முக்கியமான திருப்பமா வர்றாங்க. கஞ்சா கருப்பு, வெள்ளையனா மாறி உங்க மனசுல காமெடி விளையாட்டு விளையாடப் போறார்.

இயக்குநர் கதிர்க்கும் எனக்கும் இந்தப் படம் ஒரு நல்ல கமர்ஷியல் திருப்பு முனையாக அமையும்" என்று நம்பிக்கை யோடு பேசுகிறார் ஜீவா.

- சாந்தி

# சென்னையில் கோட்டைச்சாமி!

ஒருவர்.

''அதனாலதான் வந்து விஷயத்த உங்க காதுக்குப் போட்டுட்டுப் போகலாம்னு வந்தோம்'' என்றார் இன்னொருத்தர்.

விலை கொடுத்து வாங்கிய மாடு காணாமல் போய்விட்ட வருத்தத்தைக் கொட்டியவர்களுக்குச் சமாதானம் சொல்லி வழியனுப்பிவிட்டு, லட்சுமி எங்கே போயி ருக்கும்? என்ற சிந்தனையுடன் உள்ளே வந்தவனை, வள்ளி வேறு கிளறி விட்டாள்.

''தலப்பாடா அடிச்சிக்கிட்டேன். கேக்காம லட்சுமியப் பிடிச்சி வித்துட்டீங்க. பாவம் அது! இப்ப எங்கே போச்சோ? என்ன ஆச்சோ?'' என விசனப்பட்டுக் கொண்டாள்.

''கொஞ்சம் தண்ணிகொடு வள்ளி.'' நடந்த களைப்பில் கால்கள் அயர்ந்து போக, நாற்காலியில் சாய்ந்து விட்டத்தை வெறித்தான்.

லட்சுமி இங்கே இருந்தவரை கொல் லையில்தான் காலம் ஓடியது. வெளியே எங்கும் அவ்வளவாக மேய்ச்சலுக்கு விட்டுப் பழக்கப்படவில்லை. மேய்ச்சலுக் குச் சென்றது இரண்டு நாட்களாகக் காண வில்லை என்றால்... லட்சுமிக்கு என்ன ஆகியிருக்கும்?

சில மணி நேரத்துக்கு முன்பு தட்டுத் தடுமாறி, வழியில் கண்டவர்களையெல் லாம் விசாரித்து விசாரித்து வீடு வந்து சேர

**''தலப்பாடா அடிச்சிக்கிட்டேன். கேக்காம லட்சுமியப் பிடிச்சி வித்துட்டீங்க. பாவம் அது! இப்ப எங்கே போச்சோ? என்ன ஆச்சோ?'' என விசனப்பட்டுக் கொண்டாள் வள்ளி**

பட்டபாடு அவனுக்கு அப்போது படமாய் விரிந்தது. தலைவலி விண்ணென்று தெறிக்க ஆரம்பித்தது.

''இந்தாங்க தண்ணீ...'' அவனுக்கு முன்பாக நீட்டினாள்.

''ம்மா ...''



வள்ளி வாசல் பக்கம் சென்றாள். லட்சுமியின் குரல் எதிரொலிப்பதான பிரமை இன்னமும் ஆட்டுவிக்கிறதே என எண்ணிக் கொண்டே தண்ணீரை அண்ணாந்து குடித்தான்.

வேலைக்குச் செல்லும் மூத்த மகளின் வருமானத்தை நம்பி காலம் தள்ளும் குடும்பத்தின் நிலைபோல, லட்சுமியின் பால் வருவாயை நம்பி அவன் வீட்டில் அடுப்பு எரிந்த காலமும் உண்டு!

''என்னங்க, இங்க கொஞ்சம் வாங்களேன்!'' வாசலில் நின்ற வள்ளி உரக்கக் கத்தியதில், பதறிக்கொண்டு வாசலுக்கு ஓடிவந்த சதாசிவம் ஆடிப்போனான்.

வாயில் நுரை தள்ள மூச்சிரைத்தபடி நின்றுகொண்டிருந்தது லட்சுமி. சோர்ந்த கண்களில் கண்ணீர் கோடிட்டு இறங்கியிருந்தது. அதன் அருகில் வந்து ''லட்சுமி...'' என்றவனின் கண்கள் துளிக்க, உதடுகள் அனிச்சையாய் ஆட்டம் கண்டன.

''ம்ம்மா...!'' வலுவற்ற குரலுடன் அவனை ஏறிட்டது லட்சுமி.

குறுக்குப் பாதை வழியாக ஊருக்கு வந்து சேர வழிதெரியாமல் தடுமாறிய தன்னைவிட, வளர்ந்த இடத்தைப் பிரிந்திருக்க முடியாமல் இரண்டு நாட்களாக எங்கெங்கோ அலைந்து திரிந்து பதினைந்து கல் தொலைவிலிருந்து தன் வீட்டைச் சரியாக அடையாளம் கண்டு பிடித்து வந்து நின்றிருந்தது அந்த ஐந்தறிவு ஜீவன்! அவனுக்கு எதுவோ சுரீரென்று உரைத்தது.

விறுவிறுவென வீட்டுக்குள் ஓடினான். சாமி மாடத்தில் சுற்றி வைக்கப்பட்டிருந்த மஞ்சள் பையை எடுத்துக்கொண்டு வேகமாக வெளியே வந்தான்.

''இந்நேரம் அவங்க பஸ் ஸ்டாண்டு வரைதான் போயிருப்பாங்க'' என்றவனைப் புரிந்து கொண்டாள் வள்ளி.

''ம்ம்மா!...'' என்றது லட்சுமி. அந்தக் குரல், அவனுக்குள் பல கேள்விக் கணைகளைத் தொடுத்துக்கொண்டேயிருந்தது.

## தஞ்சை பரத்வாஜ்

**மேஷம்** : காரியங்களுக்கு வந்த தடைகள் இனிமேல் இருக்காது. குடும்பத்துல சந்தோஷம் அதிகமாகும். உடல் நிலையில் நல்ல மாற்றம் இருக்கும். தொழில்ல எதிர்பார்த்த முன்னேற்றம் உண்டுங்க. கத்திரி வெயிலு எப்படி அடிச்சாலும் உங்களுக்கு 'ஜில்'லுன்னுதான் வாழ்க்கை இருக்கும்.

*(சந்தோஷப்படும்போது பரத்வாஜையும் மறந்திடாதீங்க!)*

**ரிஷபம்** : இந்த வாரம் மகான்களின் தரிசனம் கிடைக்கப்போகுது. வேலையில் இருந்த சுமையெல்லாம் தீரப்போகுது. வியாபாரம் நல்லா இருக்கும். சகோதர வழியிலிருந்து சில பிரச்னைகள் தீர்ந்து ஜமாய்க்கப்போறீங்க. ராகு/கேது வழிபாடு நன்மையைத் தரும்.

*(மகான்களின் தரிசனம் கிடைக்கறப்போ நமக்கும் சேர்த்து ஆசி வாங்கிட்டு வாங்க.)*

**மிதுனம்** : இந்த வாரம் கல்யாணம், காது குத்தல்ன்னு எல்லாமே சுபகாரியங்கள்தான் போங்க. தேவையில்லாம வாக்குவாதம் மட்டும் பண்ணாதீங்க. கைப்பொருளை கவனமாக வைங்க. ராகு/கேது வழிபாடு நன்மையளிக்குமுங்க.

*(வெயிலைப் பற்றிக் கவலைப்படாம, வீட்டுல விசேஷம்னா குடையெடுத்துட்டுப் போய் வாங்க.)*

**கடகம்** : உங்க மனக்குறைகள் தீரும். படிப்புல நல்ல பெயர் வாங்குவீங்க. எதிரிகள் விலகிடுவாங்க. சுபகாரியங்கள் நடைபெறும். வியாபாரம் சூடுபிடிக்கும். வழக்கு வெற்றி உண்டாகும். ராகு/கேது/குரு/சனி வழிபாடு நன்மையை அதிகப்படுத்தும்.

*(உதட்டோரம் முணுமுணுக்க உங்க ஃபேவரிட் பாட்டுங்களை ஞாபகப்படுத்தி வைச்சுக்கோங்க.)*

**சிம்மம்** : வெளிநாடு போகப் போறீங்க. நகைகளை வாங்கிக் குவிக்கப் போறீங்க. குடும்பத்துல சந்தோஷம் பெருகப் போகுது. வீடு, மனைங்க வாங்க நல்ல காலம். உடம்பு நல்ல நிலையில் இருக்கும். வியாபாரம் எதிர்பார்த்தபடி இருக்கும். வாரந்தோறும் சனீஸ்வர வழிபாடு நன்மையைத் தரும்.

*(பட்டா சரி பார்க்க ஆள் தேடி வைங்க.)*

**கன்னி** : வீண் செலவு இருக்காது. பூர்வீகச் சொத்து உங்களைத் தேடி வரப் போகுது. அதோடு புதிய சொத்தும் சேரும். ஆரோக்கியத்துல குறை இருக்காது. ராகு / கேது வழிபாடு நன்மை தரும்.

*(வாய்ப்பு இருக்கும்போது சொத்துகளைப் பெருக்குங்க.)*

# நடக்குமென்பார்; நடக்கும்

**துலாம்** : புதிய தொழில் தொடங்கப் போறீங்க. வேலையில மாற்றம் வரப் போகுது. இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். கடன் தொல்லைங்க தீரும். பணக் கஷ்டங்கள் இருக்காது. உடன் பிறந்தோர்களால் நன்மைகள் நடக்கப்போகுது. ராகு/கேது/குரு வழிபாடு நன்மையைப் பெருக்கும்.

*(ஆளாளுக்குப் புதிய தொழில் தொடங்கினாத்தானே வேலை வாய்ப்பு பிரச்னை தீரும்.)*

**விருச்சிகம்** : பண வரவு அதிகமாகப் போகுதுங்க. மனச்சஞ்சலங்கள் தீருமுங்க. உத்தியோகத்துல வேலைச்சுமை குறையும். நீண்ட கால கடன் தொல்லை தீரும். உடல் ஆரோக்கியம் நல்லா இருக்கும். வாரந்தோறும் சனி வழிபாடு நன்மையைப் பெருக்கும்.

*(ஊட்டிக்குப் போகாமலே ஜில்லுனு உணருவீங்க!)*

**தனுசு** : காரியத்துல கவனமாக இருங்க. கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கை தேவைங்க. பதவிங்க தேடிவரும். இல்லற வாழ்க்கை இனிமையாக அமையும். சுப காரியங்கள் நடக்கும். ராகு/கேது/ வழிபாடு நன்மையைத் தரும்.

*(அரசியலால் வர்ற பதவியை விட, வேற பதவிங்கதான் நிரந்தரம் என்பதை மறந்துடாதீங்க)*

**மகரம்** : உடல் நல்ல ஆரோக்கியம் பெறப்போகுது. கடன் தொல்லையெல்லாம் இருக்காதுங்க. பரீட்சையில் நல்ல மதிப்பெண் எடுக்கப் போறீங்க. இல்லற வாழ்க்கையில விட்டுக்கொடுத்துப் போறது நல்லது. பணக்கஷ்டங்கள் இருக்காது. சனி வழிபாடு நன்மையைத் தரும்.

*(விட்டுக் கொடுக்கறதையே கலையா உயர்த்திக்கலாமே!)*

**கும்பம்** : மனம் சந்தோஷத்துல மிதக்கப் போகுதுங்க. சுபகாரியங்கள் நடக்கும். வாகனம் வாங்கப்போறீங்க. ஆபரணச் சேர்க்கையும் உண்டுங்க. வெளிநாடு போக வாய்ப்பு தேடிவரப்போகுது. வேலையில பதவி உயர்வு உண்டு. சனி / குரு வழிபாடு நன்மை தரும்.

**புகைப்பழக்கத்துக்கு நிரந்தரமா தடை கொண்டு வர நல்ல காலம் எப்போன்னு ஜோசியம் சொல்லுங்க... பரத்வாஜ்!**



*(கோடைக்கால தள்ளுபடியில வாகனம் வாங்க புறப்பட்டாச்சா?)*

**மீனம்** : நெருக்கமான நண்பர்களை விட்டு விலகப் போறீங்க. பூர்வீகச் சொத்துகள் வந்து சேரும். தடைப்பட்ட காரியங்கள் நடக்கப் போகுது. இல்லற வாழ்வு இனிமை பெறும். புதிய வேலை தேடி வரும். வீட்டை மாற்றப் போறீங்க. ராகு / கேது / குரு / சனி வழிபாடு நன்மையைத் தரும்.

*('பேக்கர்ஸ் அண்ட் மூவர்ஸ்' விலாசமெல்லாம் தேடி வைச்சுக்குங்க!)*

18.05.2008 முதல் 24.05.2008 வரை

ஒரு பக்கத் தொடர் 20

# புள்ளிகள்... கோலங்கள்...

தரகர், கை பிசைந்தார்.

''நானும் பலமுறை கேட்டுட்டேன் சார். 'காரணம் அவருக்கே தெரியும். எங்க வாயால சொல்லணுமா?'ன்னு திருப்பிக் கேட்டு அனுப்பறாங்க. உங்க குடும்ப சம்பந்தத்தை ஒதுக்கறாங்கன்னா... அவங்க பெரிய மடையங்கதான்...''

பொன்ராஜ், உதடு கடித்தார்.

''தற்சமயம் கைவசம் இன்னொரு வரன் இருக்கு. ஜாதகமெல்லாம் நம்ம சுலேகா ஜாதகத்துக்குப் பொருந்திதான் வருது. ஆனால்...''

''என்ன ஆனால்...?''

''நடுத்தர குடும்பம். நம்ம அந்தஸ்துக்கு ஏணி வச்சாலும் எட்டாது...''

''அது மட்டும்தான் பிரச்னையா...?''

''ஆமாங்க. மத்தபடி கௌரவமான குடும்பம்; பையன் தங்கமானவன்...''

''வரச் சொல்''

''கையோடு கூட்டிக்கிட்டு வர்றேன்...'' என்று கிளம்பிப் போன தரகர், மறுநாள், வெறும் கையாக வந்தார்.

''என்ன...?''

''சொல்லச் சங்கடமாயிருக்கு...''

''பரவால்ல...''

''பணத்துக்கு ஆசைப்படறவங்கதான் அந்த வீட்ல பெண் எடுப்பாங்கன்னு, முகத்தில் அறைஞ்சாப்ல சொல்லிட்டாங்க...'' பொன்ராஜ் கைகளை இறுக்கிக் கொண்டார்.

''வேற காரணம் சொன்னாங்களா?''

''இல்லைங்க''

''சரி போ''

''வந்த வரனெல்லாம் தட்டிப் போறதுக்கு, இதுதாண்ணா காரணம்...''

தனிமையில் இருந்த பொன்ராஜ் முன், குணசேகர் சில ஃபோட்டோக்களைப் போட்டு,

''நீங்க ஆரம்பத்திலயே சொன்னீங்க. அந்தக் குடும்பம் சரியில்லைன்னு. என் பிடிவாதத்தால, கட்டி வைச்சீங்க. பழிகாரி... வந்த நாள்லருந்து இந்தக் குடும்பத்தைப் பிரிக்கறதிலேயே குறியாயிருந்தாள். இத சராசரி பொம்பள புத்தின்னு நானும் பொறுத்துப் போனேன். ஆனால், குடும்பத்துக்குத் தீராத களங்கத்தைக் கொடுக்கறாப்ல... நம்ம சுலேகாவைப் படம் பிடிச்சி, அதை மாப்பிள்ளை வீட்டாருக்குக் கொடுத்து, வரனையெல்லாம் கெடுத்துருக்காண்ணே... அவளை வெட்டினாலும் என் ஆத்திரம் அடங்காது...'' என்று கருவினான், குணசேகர்.

(தொடரும்)



பதுதலம் சுகுமாரன்

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 2008



**படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே!**
**நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தேவிட்டது!**

**முதல் பரிசு - ரூ.10,000/-**
**இரண்டாம் பரிசு - ரூ.7,500/-**
**மூன்றாம் பரிசு - ரூ.5000/-**

**தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும்.**

**யார் வேண்டுமானாலும் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் எழுதலாம். என்றாலும் எழுதுபவர் முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராகவோ அல்லது அறிமுக எழுத்தாளராகவோ இருந்தால் சிறப்புப் பரிசு உண்டு.**

**விதிமுறைகள் :**

★ கல்கியில் நான்கு பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது. சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.

★ அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதிய தில்லையென்றும், போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதிமொழி தர வேண்டும்.

★ படைப்பாளி முப்பத்தைந்து வயதுக்குட்பட்டவராக இருந்தால், அதற்கான ஏதாவதொரு அத்தாட்சி (பத்தாம் வகுப்பு டி.சி. - ஜெராக்ஸ் போன்றவை. நகல் மட்டுமே அனுப்பவும்) கண்டிப்பாக இணைக்கப்பட வேண்டும்.

★ முழு வெள்ளைத்தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.

★ தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

★ போட்டிக்கு அனுப்பும் கதையை, முடிவுகள் வெளியாகும் வரை வேறு இதழுக்கோ, இணையதளத்துக்கோ, போட்டிக்கோ அனுப்பக்கூடாது.

★ பரிசுக்குரிய கதைகளை, நடுவர் குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியரின் தீர்ப்பே இறுதி.

★ முடிவு வெளியாகும் வரை, எவ்விதக் கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.

★ '**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி - 2008**' என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், கல்கி,**
**கல்கி பில்டிங்ஸ்,**
**47-NP ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை - 600 032.**

* **கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : ஜூன் 16.**
* **போட்டி முடிவும், முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 3 ஆண்டு மலரில் வெளியாகும்.**

**படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்துகொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.**

**- ஆசிரியர்**

சென்னை 'ஐ.டெக்' ஸ்டூடியோவில் 'மாடலிங் ஃபோட்டோ ஆல்பங் களை' உருவாக்கும் சூர்யா - நிர்மலா தம்பதி, காமரா கண்களால் அழகு பளிச்சிட வைக்கும் ஸ்மைல் ஸ்டைல் ரகசியங்களைச் சொல்கிறார்கள்.



கலரிலோ, ப்ரைட்டாகவோ இருப்பதை யூஸ் பண்ணக்கூடாது காஸ்ட்யூம் ஒரு விருந்து. அதைச் சரியான கலர்ல தான் ரசித்து ருசிக்கவைக்க முடியும். நிறம், உயரம், முக அமைப்புக்கு ஏற்ப 'கலர்' மாறுபடும். அதைச் சரியாகப் புரிந்துகொள்வது தான் ஃபோட்டோகிராபரின் வேலை.

❑ பல் தெரிய சிரிக்கிற சிரிப்பை விட, கொஞ்சமாக ஸ்மைல் பூக்கற மாதிரி எடுக்கும்போது, சூப்பரா இருக்கும். சில பேருக்கு மட்டும் தான், பல் தெரிய சிரித்தால் நல்லா இருக்கும். சில உதடுகளுக்கு 'லிப்ஸ்டிக்' அவசியமே இல்லை. அதே நேரத்தில் கொஞ்சமாக 'டச்' பண்ணினால்,

● சூர்யா - நிர்மலா

# காமராவுக்கு மூக்கிலே வியர்க்கும்!

செமத்தியாகச் சிலருக்கு அமையக்கூடும்.

❑ வட்டமான முகம் இருக்கிற ஆண் மாடல்களுக்கு மீசையை இலேசாகக் கத்தரிக்க விடணும். மேல் உதடு சற்று தெரியணும். அதே நேரத்துல மீசையும் பளிச்சுன்னு கவரணும். சிவப்பாக இருக்கறவங்க மீசை இல்லாமல்கூட அழகாகத் தெரிவாங்க. ஆனா, கறுப்பாக இருக்கறவங்களுக்குக் கண்டிப்பாக மீசை அவசியம்.

❑ கண்களுக்கு 'மை' அதிகம் தேவையில்லை. கூந்தல் அலங்காரத்துக்கும், போடற காஸ்ட்யூமுக்கும் பொருந்தும்படி மையிடலாம். புடைவை,

❑ பளபளப்பான ட்ரெஸ் 'லைட்'டிங்குக்கு ஆகாது. பிரமிக்கிற ரிசல்ட் கிடைக்காது. பட்டுப் புடைவைகூட லைட்டான கலரில்தான் ஹைலைட்டாக இருக்கும். எப்பவும் ஃபோட்டோவில் ஜிகினா வேலைப்பாடுகள் இல்லாத ட்ரெஸ்கள்தான் பெஸ்ட் லுக்.

❑ பேண்ட் ஷர்ட், ஆண் மாடல்களுக்கு ரொம்பவே திக்கான



# உடையழகு...நடையழகு...

சுடிதார் போன்ற ஹோம்லி ட்ரெஸ்ஸுக்கு மையிடுவதைக் குறைத்துக்கொள்ளும் போது கச்சிதமான அழகு ஒட்டிக் கொள்ளும். நவீன ரக 'டிசைன்களில்' உடுத்தும்போது வேண்டுமானால், 'மை' கொஞ்சம் அதிகமாக இடலாம்.

❑ காமரா முன் நேரா நிற்கும்போது சிலர் ஸ்டைலாக இருப்பாங்க. சிலர் சற்று சாய்ந்து இருப்பாங்க. 'நச்'ன்னு தெரி



வாங்க. ஒவ்வொரு பர்ஸனாலிட்டிக்கும் ஒரு அழகு. அதை ஒவ்வொரு கோணமாக காமராவை நகர்த்தி தேடிக்கிட்டே இருக்கணும். சரியான பாயின்டுல காமராவுக்கு மூக்கிலே வியர்க்கும்; கிளிக் பண்ணிடணும்!

❑ மூக்கழகு கொண்ட பெண்ணுக்கு 'கண்ணாடி' போட்டால் முக வசீகரம் கூடிடும். அதோடு கொஞ்சம் 'மாடர்ன் ட்ரெஸ்' போட்டால் ரம்மியமா இருப்பாங்க. பெரிய விழிகள் கொண்டவர்களை குறுகுறுன்னு காமரா முன் பார்க்க வைக்கக் கூடாது. சின்ன விழி கொண்டவர்களை மிகச் சரியாக காமராவைப் பார்க்கச் செய்யணும்.

❑ சில பர்ஸனாலிட்டிகளுக்கு மிகச் சரியான காஸ்ட்யூம் தேர்ந்தெடுப்பது சற்று கடினம். அப்படித் தேர்ந்தெடுத்தா அதுக்கேத்த மாதிரி ஹேர் ஸ்டைல், 'போஸ்' எல்லாம் சொல்லிக் கொடுத்து 'க்ளிக்' பண்ணணும்.

❑ ''மாடலிங் துறையில வர விரும்புகின்றவர்கள் உங்க ஃபோட்டோ ஆல்பத்தைச் சரியாக வைச்சுக்கங்க. உங்க திறமையை வளர்த்துக்குங்க...'' என்று சொல்லி, நமக்கு குட்பை சொல்கிறாங்கள் சூர்யா - நிர்மலா தம்பதி.

**- மாசி**





# எழுதினால் தண்டனை?




கிட்டத்தட்ட கதவை உடைத்துக் கொண்டுதான் உள்ளே நுழைந்தார்கள். மொத்தம் 21 பேர். பேரி பெராக் சடாரென்று இருக்கையிலிருந்து எழுந்தார். இரண்டு பேர் அவரைப் பிடித்துக்கொண்டார்கள். 'எதுவும் பேசாதே. பேசினால் அடி விழும்.' அவர்கள் முதலில் கைப்பற்றியது பேரியின் லாப்டாப்பை. திறந்தே இருந்தது. மைக்ரோஸாஃப்ட் வேர்டில் ஏதோ எழுதிக் கொண்டிருந்திருக்கிறார். அதுவும் ஆங்கிலத்தில். இதைவிட நல்ல தடயம் கிடைக்குமா?

பிறகு அவருடைய மொபைல் ஃபோன். இவருக்கு வந்த, இவர் செய்த அழைப்புகளை ஒரு லிஸ்ட் போட்டால் கேஸ் வலுவாகிவிடும். டேபிள் மீது பரப்பி வைக்கப்பட்டிருந்த அத்தனை காகிதங்களையும் ஒன்றுவிடாமல் கவனமாகச் சேகரித்து வைத்துக்கொண்டார்கள். பாஸ்போர்ட்டை வாங்கி சட்டைப் பையில் செருகிக்கொண்டார்கள். பிறகு, நின்று நிதானமாக அந்த அறையில் தேட ஆரம்பித்தார்கள். மூலை, முடுக்கு, குப்பைத் தொட்டி, கழிப்பறை, படுக்கை விரிப்பு எதையும் விட்டுவைக்கவில்லை. கசக்கிப் போட்ட பஸ் டிக்கட்டைக்கூட குனிந்து எடுத்து, சுருக்கம் போக நீவிவிட்டு பத்திரப்படுத்திக்கொண்டார்கள்.

அதே இடத்தில் முதல் கட்ட விசாரணை. 'எங்கிருந்து வருகிறாய்? இங்கே என்ன சதி செய்துகொண்டிருக்கிறாய்? ஆங்கிலத்தில் ஏதேதோ சங்கேதக் குறிப்புகளை எழுதி வைத்திருக்கிறாயே, எதைப் பற்றி? எந்த தேசத்து உளவாளி? யார் உன்னை அனுப்பி வைத்தது? ஒழுங்கு மரியாதையாக ஒப்புக்கொண்டால் தண்டனை குறைவாகக் கிடைக்கும்.'

பேரி பெராக் நிதானமாகப் பதில் அளித்தார். 'ஐயா, நான் ஓர் அமெரிக்கன். நியூயார்க் டைம்ஸில் பணிபுரிகிறேன். ஜிம்பாப்வே தேர்தல் பற்றி ரிப்போர்ட்டிங் செய்வதற்காக இங்கே வந்திருக்கிறேன். பத்திரிகையாளர். உளவு பார்ப்பது என் தொழில் அல்ல. தனது அடையாள அட்டையை எடுத்து நீட்டினார் பெராக். அதையும் வாங்கி உள்ளே வைத்துக்கொண்டார்கள். 'ஸ்டேஷனுக்கு வா. மிச்சத்தை அங்கே வந்து சொல்.' லாரி போன்ற ஒரு வாகனத்தில் அவரை ஏற்றினார்கள். ஜீப் கூடவா இல்லை?

ஒரு பெண் வழக்கறிஞரிடம் அவரை நகர்த்திக்கொண்டு போனார்கள். பெயர் டெட்வா. அவர் பெராக்கை விசாரித்தார். பிறகு சாந்தமான குரலில் சொன்னார், 'பயப்படாதீர்கள். பத்திரிகையாளராக இருப்பது அத்தனை பெரிய குற்றமில்லை. ராபர்ட் முகாபேவுக்கு எதிராக நீங்கள் எதுவும் எழுதக்கூடாது என்பதற்காகத்தான் இக்கணை



கட்டுப்பாடுகள். அயல்நாட்டுக்காரர்கள் அத்தனை பேரையும் காவல்துறை சந்தேகத்துடன்தான் பார்க்கும். நீங்கள் ரிப்போர்ட்டர் வேறு. அதனால்தான் பிடித்துக் கொண்டுவிட்டார்கள்.'

அப்பாடா, இனி பிரச்னை இல்லை.

**• மருதன் •**



• ராபர்ட் முகாபே

• பேரி பெராக்

கிளம்புவதற்குத் தயாராகிவிட்டார் பெராக். 'இரு ராஜா' என்று சொல்லி, அவரை லாக் அப்பில் கொண்டு போய் உட்கார வைத்தார்கள். கம்பிக் கதவுக்கு வெளியில் இருந்தபடி புன்னகை செய்தார் டெட்வா. 'கைது செய்து கொண்டுவந்த பிறகு அப்படியே விட்டுவிட முடியாது அல்லவா? அதான். இரண்டு, மூன்று நாட்கள்தான். விட்டுவிடுவார்கள். நான் வரட்டுமா?'

இரவு முழுவதும் தூங்க முடியவில்லை பெராக்கால். மூட்டைப்பூச்சியாக இருக்கும் என்று நினைத்தார். ஆனால், அது வேறு இனம் என்று தெரிந்தது. எங்கிருந்தெல்லாமோ விழுந்து, எங்கெல்லாமோ கடித்தது. 'போர்வை கிடைக்குமா?' என்று கேட்டார். மொபைல் ஃபோன் லைட்டை அடித்துத் தேடிப் பார்த்தார். கிடைக்கவில்லை. கழிப்பறை இல்லை. கைதிகளுக்குத்தான் என்றில்லை. அதிகாரிகளுக்கும் கழிப்பறை இல்லை. கம்ப்யூட்டர் இல்லை. லொட்டு லொட்டு என்று தட்டச்சை அதிகாரிகள் தட்டிக் கொண்டிருந்தார்கள். தரை முழுவதும் குப்பை.

இரண்டாவது நாள். பெராக்கை உள்ளே வைத்துப் பூட்டிவிட்டு சாவியை எங்கேயோ வைத்து விட்டார்கள். ஒரு நாள் முழுவதும் தேடிக் கண்டறிந்திருக்கிறார்கள். மூன்றாவது நாள். ஞாயிற்றுக்கிழமை. விடுமுறை. போர்வை கிடைக்கவில்லை. கடவுளே என்று இரு கைகளையும் கூப்பி மேலே பார்த்தார் பெராக். எப்போது வேண்டுமானாலும் விழுந்துவிடும் நிலையில் இருந்தது கூரை. கோபம், சோகம் எல்லாவற்றையும் கடந்து அழுகை வந்தது. ஒரு கட்டுரை எழுதியதற்கா இந்தத் தண்டனை?

நான்காவது நாள் கதவைத் திறந்து விட்டார்கள். தண்ணீர் லாரி வகையறா வண்டியை உருட்டிக்கொண்டு வந்திருந்தார்கள். நார் நாராகக் கிழிந்திருந்தது சீட். ஆனால் அது முக்கியமில்லை. வண்டி நகரவில்லை. நான்கு பேர் வண்டியைத் தள்ளிவிட்டபடியே பின்னால் ஓடிவந்தார்கள்.

உடனே மூட்டை முடிச்சைக் கட்டினார். விமான நிலையம் போகும் வழியெல்லாம் மண்டைக்குள் யுத்தம். சட்டம் ஒழுங்கு என்னும் பெயரைத் தாங்கிய அந்தப் பதாகை மட்டும் எப்படி அத்தனை சுத்தமாக இருந்தது? யார் அதைத் துடைத்து வைத்திருப்பார்கள்? ஏன் அதை மட்டும்?

**வெ**ளிநாட்டிலிருந்து ஒரு மாத விடுமுறையில் இந்தியா வந்திருந்த நபர் டாக்டரிடம் போனார். ''டாக்டர், எனக்கு ஃபுல் செக்-அப் பண்ணனும். ஒரு மாதம் இருப்பேன்'' என்றார்.

''நீங்க தவறான இடத்துக்கு வந்துட்டீங்க. நான் வெட்ரினரி டாக்டர். நீங்க எதிரே இருக்கற கிளினிக்குக்கு போங்க.''



# அக்கவுண்டண்ட்!

''இல்ல டாக்டர். எனக்கு நீங்கதான் வைத்தியம் பார்க்கணும்.''

''முடியவே முடியாது. நீங்க என்னைப் போலவே பேசறீங்க, யோசிக்கறீங்க, நடக்கறீங்க. அதனால நீங்க மிருகம் இல்லை, மனிதன்.''

''எனக்குத் தெரியும் நான் மனிதன் என்று. ஆனா, என்னோட குறைகளைக் கேளுங்க, ப்ளீஸ் டாக்டர்.''

''ஓ.கே. சொல்லுங்க.''

''இரவு பூரா நாய் மாதிரி எச்சரிக்கையா தூங்கறேன்; ஸொர்க்லோடைப் பத்தியே நினைப்பு; காலையில் குதிரை கணக்கா எந்திரிச்சு, மான் கணக்கா ஆஃபிஸுக்குத் துள்ளி ஓடறேன். நாள் முழுக்க கழுதையா உழைக்கறேன். விடுமுறையே இல்லாமல் 11 மாசம் காளை மாடு கணக்கா உழுதுண்டிருக்கேன் வேலை வேலைன்னு. என்னுடைய எல்லா பாஸுங்களுக்கெதிரேயும் வாலை ஆட்டறேன். டயம் கிடைக்கும்போதெல்லாம் குரங்கு மாதிரி குழந்தைகளுடன் விளையாடறேன். என் மனைவிக்கெதிரே நான் முயல் குட்டி...''

''சரி... சரி, நீங்க என்ன அக்கவுண்டண்ட்டா?''

''ஆமா டாக்டர்.''

''இத்தனை விளக்கமான பெரிய்ய கதை எதுக்குய்யா? முதல்லேயே நான் அக்கவுண்டெண்ட்னு சொல்லியிருக்கலாமே. நான்தான் உனக்கு வைத்தியம் பார்க்கணும்.''

வாசகியர் அனுபவம்

# கொல்லைப்புறத்துக் குதூகலம்!

வெள்ளிக்கிழமை. துளஸி மாடத்தில் விளக்கேற்றி, வலம் வந்து, குனிந்து நமஸ்கரித்து எழ முற்பட்ட பொழுது, தும்பைச் செடிகளின் நடுவே, நீளமாக, பளபளவென்று ஏதோ தெரிந்தது.

அருகில் சென்று, செடிகளைத் தள்ளி விட்டுப் பார்த்தால், என்னாலே நம்ப முடியவில்லை! தும்பைச் செடிகளின் நடுவில் ஒரு மிளகாய்ச்செடி! அதில் இரண்டு மிளகாய்கள்! ஒன்று, செக்கச் செவேலென்று, ஆறு இஞ்ச் நீளமாக, நுனியில் ஸ்ப்ரிங் போல வளைவுகளுடன்! மற்றொன்று, நல்ல பச்சை - நீளமாக! இவ்வளவு நாளாக என் கண்ணில் படவே இல்லையே! ஒரு புதையலைக் கண்டது போல் மகிழ்ச்சி எனக்கு!

இரண்டையும் பறித்துக் கொண்டு, ''என்னங்க! இதைப் பாருங்க, நம்ப தோட்டத்துல! எவ்வளோ பெரிசு! எத்தனை அழகாயிருக்கு!''

பேப்பரில் மூழ்கியிருந்த கணவரிடம் காட்ட முற்பட்ட போது, ''என்ன? பெரிசா?'' பேப்பரிலிருந்து கண் எடுக்காமலே கேட்டார்.

''என்னதான்னு பாருங்களேன்! பேப்பர் என்ன ஓடியா போகும்!'' விடவில்லை நான்.

''உன் நச்சு தாங்கலே! நீ ரிடையரானப் புறம், என்னாலே நிம்மதியா ஒரு பேப்பர் கூடப் படிக்க முடியலே!'' முணு முணுத்தவாறு, தலையைத் தூக்க,

''எவ்ளோ பெரிசா, நீளமா, பளபளன்னு இருக்கு, பாருங்க...''

''ப்பூ! இவ்ளோதானா?''

மறுபடியும் பேப்பரில் புதைந்து விட்டார்.

சே! கொஞ்சம்கூட ரசனையே இல்லையே. என் ஆர்வம் எல்லாம் புஸ்ஸென்று அடங்கிப் போக, அதை கிச்சன் ஜன்னலில் நூல் கட்டித் தொங்கவிட்டேன்.

இந்த 'ப்யாடிகே' (byadige) மிளகாய், கர்நாடகாவில் மிகவும் பிரஸித்தமானது. இதன் 'ஸ்பெஷாலிடி' என்னவென்றால், மிகவும்

நீளமாகவும், வெப்பாகவும் இருக்கும். ஆனால், காரம் அதிகம் இருக்காது. இப்பேர்ப்பட்ட மிளகாய், என் தோட்டத்தில் விளைந்ததில் எனக்கு ஒரே பெருமை.

இதை ரசித்து, மகிழக்கூடிய ஒரே நபர், என் தாய்தான்! அதனால், மிளகாய்களை எடுத்துக்கொண்டு, ஓடினேன் அம்மா வீட்டுக்கு. நான் நினைத்தபடியே, அவரும் அவற்றைக் கண்டு, ஆச்சரியப்பட்டு மகிழ்ந்தார். "இதை ஒரு ஃபோட்டோ எடுத்து அமெரிக்காவில் இருக்கிற உன் பேத்திகளுக்கு அனுப்பு" என்றார்.

"அடாடா! இப்போ எங்கிட்ட காமிராவே இல்லையே!" என்றேன்.

வீடு திரும்பும்போது, இந்த மிளகாயை எப்படி உபயோகிக்கலாம் என்று யோசித்தபடி நடந்தேன்.

**"ஏன் முகம் வாட்டமாயிருக்கு? எதையாவது தொலைத்துவிட்டாயா? ரூபாய்,நகை ஏதாவது காணுமா? தேடு. தேடுன்னு தேடறியே?" என்றார் என் கணவர்.**

காலையில் சமைக்கும்பொழுது, மிளகாயைத் தேடினால் காணோம்! எங்கே வைத்தேன்? மூலை முடுக்கெல்லாம் தேடியும், எங்கும் இல்லை. என் மனது ஒடிந்துவிட்டது. இரண்டு நாட்கள் தேடுவதிலேயே கழிந்தன.

"ஏன் முகம் வாட்டமாயிருக்கு? எதையாவது தொலைத்துவிட்டாயா? ரூபாய், நகை ஏதாவது காணுமா? தேடு, தேடுன்னு தேடறியே?" என்றார் கணவர்.

அம்மாவுக்கு ஃபோன் பண்ணி, மிளகாயை அங்கேயே விட்டு வந்தேனா என்று விசாரித்தேன். அவர், "இங்கே இல்லையே. நீ கொண்டு வந்த தோள் பையிலே, ப்ளாஸ்டிக் கவர்லே, வைச்சிருந்தியே!" என்றார். உடனே ஓடிப் போய், தோள் பையில் தேட, ஆஹா! பத்திரமாய் இருந்தன. சொத்து கிடைத்த மகிழ்ச்சி எனக்கு! 'கட்' பண்ண மனசே இல்லாமல் பொடிப்பொடியாக வெட்டி, சமையலில் சேர்த்தேன். சாப்பாடு பரிமாறிவிட்டு, "எப்படி இருக்கு?" என்றேன் என் கணவரிடம்.

"ஆஹா! பிரமாதம்! உன் விலை மதிப்பில்லா மிளகாயோட சமையல்" என்றார் என் கணவர்.

உச்சி குளிர்ந்தது எனக்கு. ஆசையுடன் செடியைத் தடவி, தண்ணீர் ஊற்றினேன்.

**- வசுமதி கிருஷ்ணஸ்வாமி**

*"ரெண்டு பேரும் சண்டைய நிறுத்தறீங்களா...? தெரு நாயெல்லாம் பயப்படுது."*

**- எஸ்.ஜெ.கலைவாணி**





**சோ** எழுதிய

## மஹாபாரதம் பேசுகிறது
ரூ. 600/-

## வால்மீகி ராமாயணம்
ரூ. 600/-

## ஹிந்து மஹா சமுத்திரம்
(3 பாகங்கள்)
ரூ. 600/-

## அதிர்ஷ்டம் தந்த அனுபவங்கள்
ரூ. 145/-

## இந்து தர்மம்
ரூ. 75/-

## எங்கே பிராமணன்?
ரூ. 125/-

## வெறுக்கத்தக்கதா பிராமணீயம்?
ரூ. 35/-

| | |
|---|---|
| 1. வந்தேமாதரம் | 115.00 |
| 2. வாஷிங்டனில் நல்லதம்பி | 100.00 |
| 3. சர்க்கார் புகுந்த வீடு | 100.00 |
| 4. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 1) | 130.00 |
| 5. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 2) | 75.00 |
| 6. கூவம் நதிக்கரையினிலே (பாகம் 3) | 40.00 |
| 7. துக்ளக் படமெடுக்கிறார் | 50.00 |
| 8. அதிகப் பிரசங்கம் | 45.00 |
| 9. இவர்களைத் தெரிந்து கொள்ளுங்கள் | 50.00 |
| 10. யாரோ இவர் யாரோ? | 65.00 |
| 11. சாதல் இல்லையேல் காதல் | 80.00 |
| 12. மை டியர் பிரம்மதேவா | 30.00 |
| 13. இந்தியா எங்கே போகிறது? | 20.00 |
| 14. துக்ளக் கேள்வி - பதில் I & II | 100.00 |
| 15. ஒண்ணரைப் பக்க நாளேடு | 40.00 |
| 16. காமராஜை சந்தித்தேன் | 60.00 |
| 17. புரட்சி கீதை | 35.00 |
| 18. திரையுலகைத் திரும்பிப் பார்க்கிறேன் | 45.00 |
| 19. யாருக்கும் வெட்கமில்லை | 40.00 |
| 20. சட்டம் தலை குனியட்டும் | 40.00 |
| 21. எங்கே போகிறாய்? | 40.00 |
| 22. என்று தணியும் இந்த சுதந்திர தாகம்? | 35.00 |
| 23. இறைவன் இறந்து விட்டானா? | 35.00 |
| 24. இன்பக் கனா ஒன்று கண்டேன் | 25.00 |
| 25. சாத்திரம் சொன்னதில்லை | 40.00 |
| 26. சரஸ்வதியின் சபதம் | 35.00 |
| 27. ஜட்ஜ்மெண்ட் ரிசர்வ்டு | 35.00 |
| 28. நேர்மை உறங்கும் நேரம் | 30.00 |
| 29. மனம் ஒரு குரங்கு | 40.00 |
| 30. ஏன் கூடாது? | 40.00 |
| 31. இரவில் சென்னை | 40.00 |
| 32. முகமது பின் துக்ளக் | 35.00 |
| 33. உறவுகள் இல்லையடி பாப்பா | 40.00 |
| 34. சம்பவாமி யுகே யுகே | 40.00 |
| 35. எதற்காக? | 35.00 |
| 36. உண்மையே உன் விலை என்ன? | 45.00 |

**எஸ்.குருமூர்த்தி** எழுதிய — **தண்ணீர் விட்டோ வளர்த்தோம்** (3 பாகங்கள்) — ரூ. 525/-

**பரத்வாஜ்** எழுதிய — **ஆட்சி முறை - ஒரு பார்வை** — ரூ. 200/-

**கி.வா.ஜ.** எழுதிய

**தமிழ்ப் பழமொழிகள்** (4 பாகங்கள்) ரூ.400/-

**கி.வா.ஜ. பதில்கள்** (3 பாகங்கள்) ரூ. 165/-

**அபிராமி அந்தாதி விளக்கவுரை** (4 பாகங்கள்) ரூ. 300/-

**கந்தர் அலங்காரச் சொற்பொழிவுகள்** (6 பாகங்கள்) ரூ. 735/-

**தேவன்** எழுதிய

| | |
|---|---|
| 1. துப்பறியும் சாம்பு - நாடகவடிவம் | ரூ. 65.00 |
| 2. சொன்னபடி கேளுங்கள் | 54.00 |
| 3. மல்லாரி ராவ் கதைகள் | 80.00 |
| 4. அப்பளக் கச்சேரி | 70.00 |
| 5. ராஜியின் பிள்ளை | 45.00 |
| 6. போக்கிரி மாமா | 90.00 |
| 7. மனித சுபாவம் | 65.00 |
| 8. ஏன் இந்த அசட்டுத்தனம் | ரூ. 55.00 |
| 9. விச்சுவுக்குக் கடிதங்கள் | 55.00 |
| 10. ராஜத்தின் மனோரதம் | 50.00 |
| 11. சீனுப்பயல் | 80.00 |
| 12. பார்வதியின் சங்கல்பம் | 60.00 |
| 13. பல்லிசாமியின் துப்பு | 75.00 |
| 14. சின்னஞ்சிறு கதைகள் | 65.00 |
| 15. ரங்கன் பெரியப்பா | 52.00 |



(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் பத்திரிகை நிறுவனம்)

**மா**லதி கொடுத்த காப்பியைக் கொட்டிக்கொண்டு விடுவிடுவென்று ஓடினான் வாசுதேவன். பையைத் தூக்கிக்கொண்டு பைக்கை ஸ்டார்ட் செய்யும்போது மணி ஒன்பதைத் தாண்டிவிட்டது.

இனி துரைசாமி சப்வேயைத் தாண்டி, காலை நேர டிராஃபிக் நெரிசலில் ஊர்ந்து போய், ஜெமினி ஃப்ளைஓவர் அருகே அவன் வேலை பார்க்கும் விளம்பர ஏஜென்ஸிக்குப் போய்ச்சேர குறைந்த பட்சம் முக்கால் மணி நேரம் ஆகிவிடும். 9.30க்கு அட்டெண்டன்ஸ் ரெஜிஸ்டரை உள்ளே எடுத்துக்கொண்டு போய்விடுவார்கள். இன்றைக்கு நிச்சயம் லேட்தான். மேனேஜர் பிரசன்னவதனனிடம் பெரிய டோஸ் கிடைப்பது நிச்சயம்.

தாமதத்துக்குக் காரணமான பால்கார ஆயாவையும், பால் ட்ரக் காரனையும் சபித்துக்கொண்டே பைக்கை ஓட்டினான். ஒவ்வொரு சிக்னலிலும் நின்று நின்று போய்ச் சேர்வதற்குள், அவன் பயந்த மாதிரியே நடந்துவிட்டது.

என்றைக்குமில்லாமல் அன்று வாசு வரும் முன்னரே அவனுடைய கேபினுக்குள் எட்டிப் பார்த்துவிட்டு, அவன் நேரத்துக்கு வரவில்லை என்பதைக் குறித்துக்கொண்டு, ''ஆஸ்க் ஹிம் டு கம் அண்ட் மீட் மீ வென் ஹி கம்ஸ் இன்'' என்று உத்தரவும் போட்டுவிட்டுப் போயிருந்தார் பிரசன்னவதனன்.

**ஜி.பி. சதுர்புஜன்**



வாசு வந்தவுடன் அவனுடைய செக்ரட்டரி மரியாதான் சொன்னாள். அவனுக்கு மானம் போயிற்று. அவன் கேள்வி கேட்க

வேண்டிய செக்ரட்டரியே அவனுக்கு இந்த மாதிரி மெஸேஜ் தருகிறாள்.

பையை டக்கென்று மேஜைமேல் வைத்துவிட்டு ஓடினான்.

பிரசன்னவதனன் உர்ரென்று இருந்தார். ''வாட் மேன்? ஒய் ஸோ லேட்? நீ இப்படி வந்தால், உன் கீழ் வேலை செய்யும் உன்னுடைய மத்த டீம் மெம்பர்ஸ் எப்படி டைம்க்கு வருவாங்க? இதையெல்லாம் பத்தி நீ யோசிக்க வேண்டாமா?''

பேசிக்கொண்டே போனவரை, ''சாரி சார்'' என்று இடைமறித்தான். அந்த வார்த்தையைக்



# ஒரு நாள்..!

கேட்டுவிட்டால் சாமி மலையேறாது என்று வாசுவுக்குத் தெரியும்.

''ஓ.கே. அதெல்லாம் விடுய்யா. இப்ப பன்னிரண்டு மணிக்கு நம்ம அட்வர்டைசிங் கேம்பெயினை எடுத்துக்கிட்டு ட்ரீம் ஹோம்ஸ் கம்பெனிக்குப் போயாகணுமே. கேம்பெயின் ரெடியா?''

''இல்ல சார். இன்னும் முடியலே. ஆர்ட் டைரக்டர் சிவா இன்னும் அந்த ப்ரின்ட் விளம்பரத்தை ரெடி பண்ணலே. ஃபோட்டோ வர லேட்டாயிடுச்சு நேத்திக்கு...''

''போய்யா, போ... இந்த சால்ஜாப்பெல்லாம் அங்க ட்ரீம் ஹோம்ஸ் மார்க்கெட்டிங் மேனேஜர் மாத்யூகிட்ட சொல்லிக்கிட்டிருக்க முடியாது. அவனுக்குக் கோபம் வந்தா, கஷ்டப்பட்டுப் பிடிச்ச நம்ம பிஸினஸே கையை விட்டுப் போயிடும். ஒரு க்ளயன்ட்ட எவனாவது கை நழுவ விடுவானா? டூ எனிதிங்... பட் வீ ஹேவ் டு லீவ் அட் ட்வெல்வ் ஓ க்ளாக், ஷார்ப்!''

பிரசன்னவதனன் முடிப்பதற்கு முன்பே அங்கிருந்து பறந்த வாசுதேவன், தன்னுடைய கேபினுக்குத் திரும்பாமல், நேரே ஆர்ட் டைரக்டர் சிவாவுடைய டேபிளை நோக்கி விழுந்தடித்து ஓடினான்.

''டோன்ட் ஒர்ரி... வாசு... இதோ வந்துடும் ஃபோட்டோ. ஸ்டூடியோவிலேர்ந்து மெயில் பண்ணறேன்னு சொன்னாங்க. எல்லாம் ரெடியாயிடும்'' சிவா ஆதரவாகப் பேசினாலும் வாசுவுக்கு நம்பிக்கையே வரவில்லை.

இந்த சிவா இப்படித்தான். இதோ வந்துடும், இதோ ரெடியாயிடும், இதோ குடுத்துடறேன்னு சொல்வானே தவிர, கடைசி நிமிஷம் வரை இழுத்தடித்து விடுவான்.

ஒரு வழியாக பன்னிரண்டு மணிக்குத் தான் மாடல் ஃபோட்டோவே வந்தது. அந்த ஃபோட்டோவை மான்டாஜ் செய்து, டிசைனில் பொருத்த, ஆர்ட்வொர்க் ரெடியாகும்போது மணி ஒன்றாகிவிட்டது.




பொறுமை முழுவதும் போய்விட, பிரசன்னவதனன், தன் டிரைவரை காரை ஸ்டார்ட் செய்யச் சொல்லிவிட்டு, தயாராக உர்ரென்று வண்டியிலேயே காத்திருந்தார். வாசு ஆர்ட்வொர்க்கோடு ஓடி வந்து வண்டிக்குள் ஒட்டிக்கொண்டான்.

''இன்னிக்கு நாம தொலைஞ்சோம், போ...'' என்று போகும் வழியெல்லாம் பிரசன்னவதனன் பயமுறுத்திக்கொண்டே வந்தார். வாசுவால் நெளிவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்?

டீரீம் ஹோம்ஸ் அலுவலகத்துக்குள் நுழையும்போது வாசல் கேட்டிலேயே மாத்யூ எள்ளும் கொள்ளுமாய் வெடித்தார்.

''ஐ தாட் யூ வெர் கமிங் அட் ட்வெல்வ் ஓ க்ளாக். யூ நோ வாட் தி டைம் ஈஸ் நௌ? ரெண்டரை மணிக்கு மேலேயே ஆயிடுச்சு இப்போ. என்னுடைய ஜெனரல் மேனேஜர் லன்சுக்குக்கூடப் போகாமல், உங்களுக்காக வெய்ட் பண்ணிக்கிட்டிருக் கார். இதுதான் உங்க க்ளயன்ட் சர்வீஸ் லட்சணமா?''

கான்ஃபரன்ஸ் ரூமுக்குள் அவர்களிருவரும் மாத்யூவுடன் நுழைந்தபோது, ஜெனரல் மேனேஜர், ''ஆஸ்க் தெம் டு கெட் லாஸ்ட். ஐ டோன்ட் வான்ட் டு மீட் தெம்'' என்று காமாசோமாவென்று கத்திக்கொண்டிருந்தார். ஆனால், பிரசன்ன வதனனைப் பார்த்ததும், கோபத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டு, ''பெட்டர் லேட் தேன் நெவர்'' என்று நையாண்டியுடன் வரவேற்றார்.

அன்று மீட்டிங் முழுவதும் அவருக்கு மூடே சரியில்லை. ஆயிரம் நொள்ளை சொள்ளைகள். ஒன்று மாற்றி ஒன்று. ஒருவழியாக, 'தப்பித்தோம் பிழைத்தோம்' என்று கிளம்பும்போது மணி ஐந்தரை.

திரும்பும் வழியில் பிரசன்னவதனன் கடுகடுவென்றுதான் வந்தார். வாசுவுடன் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. 'வீ வில் டிஸ்கஸ் திஸ் டுமாரோ' என்ற புதிரோடு, கிளம்பிவிட்டார். அலுவலகம் திரும்பியதும் சிவாவிடம் ஆர்ட்வொர்க்கில் சில திருத்தங்களைச் சொல்லிவிட்டு, வாசு வீடு திரும்பியபோது மணி 6.30.

வாசலிலேயே வழி மறித்தாள் மாலதி.

''ஏன் இவ்வளவு லேட்? சத்யம்லே இன்னிக்கு சினிமா டிக்கெட் புக் பண்ணியிருக்கோமே, மறந்தாச்சா? இப்பவே மணி ஆயிடுச்சே?''

உண்மையில் இத்தனை டென்ஷனில் வாசு மறந்துதான் விட்டான். ஆனால்

> **''ஏன் இவ்வளவு லேட்? சத்யம்ல இன்னிக்கு டிக்கெட் புக் பண்ணியிருக்கோமே, மறந்தாச்சா?'' என்றாள் மாலதி.**

இதையெல்லாம் மாலதியிடம் சொல்லிக் கொண்டிருக்க முடியுமா?

உடை மாற்றிக்கொண்டு ஓடினார்கள் இருவரும். போய்ச்சேரும்போது, படம் ஆரம்பித்துவிட்டிருந்தது.

''ஏன்யா இவ்வளவு லேட்? நேரத்துக்கு ஆஃபீஸ் வர முடியாத நீயெல்லாம் இன் னும் வேலையில ஏன்யா இருக்கே? வேற எங்கியாவது போய்த் தொலைய வேண்டி யதுதானே? என் கழுத்தை ஏன்யா அறுக் கறீங்க?'' - திரையிலும் அதே காட்சி!

வாசு மனம் விட்டுச் சிரித்தபோது ''ஷ்... என்னங்க இது'' என்று அவனை அடக்கினாள் மாலதி! ●

# பெரிய பரிகாரம்



பிரபஞ்சத்தின் சகல ஆட்டத்துக்கும் காரணம், ஒரே ஒரு பராசக்திதான். அந்த ஒரே ஈசுவரனுடைய ஆக்ஞைப்படிதான் உலக இயக்கம் முழுவதும் நடக்கிறது. அவன் பல விஷயங்களைச் சம்பந்தப்படுத்திவிடுகிறான். இந்த உலகத்தில் எதுவுமே தொடர்பில்லாமல் நடக்கவில்லை. நமக்குச் சம்பந்தமில்லாதவையாகத் தோன்றுவதையெல்லாம் உள்ளூறச் சம்பந்தப்படுத்தி வேடிக்கை பார்க்கிறான் சர்வேசுவரன்.

ஒருவர் செய்கிற கர்மம், அதன் பலன் இவையே மனித வாழ்வின் சுக துக்கங்களுக்கு முதற் காரணம். இதற்கே துணைக்காரணமாக - அல்லது அடையாளமாக - கிரகசாரம், தெய்வ குற்றம், ஆரோக்கியக் குறைவு முதலியன அமைகின்றன.

ஜாதக ரீதியில், வைத்திய ரீதியில், மாந்திரீக ரீதியில் எப்படி வேண்டுமானாலும் பரிகாரம் தேடிக்கொள்ளலாம். நம் கர்மா தீருகிறபோது, அவை பலன் தரும். பகவான் விட்ட வழி என்று பக்தியோடு நம் வாழ்க்கையை ஈசுவரார்ப்பணம் செய்துவிட்டுப் பேசாமல் கிடக்கிற பக்குவம் இருந்தால், எல்லாவற்றையும்விட அது சிலாக்கியம். அதுவே பெரிய பரிகாரம்; உண்மையான பரிகாரம்.

பூர்வ கர்ம சமாசாரம் எப்படிப் போனாலும் இனிமேலாவது கர்மபாரம் ஏறாமல் பார்த்துக் கொள்வதே முக்கியம். பழையதற்குப் பரிகாரம் தேடுவதைவிட, புதிய சுமை சேராமல், பாவம் பண்ணாமல் வாழ்வதற்கு ஈசுவரனைத் துணைகொள்வதே முக்கியம்.

**ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

# கிருமி  யுத்தம்!

'நான்காவது உலக மகாயுத்தத்தில் முக்கிய ஆயுதமாகக் கல்லை எறிந்து சண்டை போட்டுக்கொள்வார்கள்' - இது ஓர் அறிவியல் ஊகம். இரண்டாம் உலக யுத்தம் முடிந்த கடந்த 63 வருடங்களில் அறிவியலும் தொழில்நுட்பமும் ஏகமாக முன்னேறிவிட்டன. அடுத்து மூன்றாம் உலகப் போர் வந்தால், அது அணு ஆயுதங்களைக் கொண்டு நடக்கும். அதன் மூலம் மனித இனமே அழிந்து போகலாம். அழிந்து மறுபடி தோன்றினால் அடுத்த கற்காலம். அப்போது வரும் போரில் கல்லே ஆயுதம்.

அணுகுண்டு வீசி அழிக்காமல், அதைவிட அதிகமாக நாசத்தை உருவாக்கும் ஆயுதம் ஒன்று உண்டு. நோய்க் கிருமிதான் அது. உயிரோடு இருக்கும் கிருமியை ஊரில் பரப்பி, உயிர்களையெல்லாம் பறிக்க வழிசெய்யும் உயிர்க்கொல்லி யுத்த முறை (பயோலாஜிக்கல் வார்ஃபேர்). இந்த நூற்றாண்டின் பெரும் தலைவலி.

கிரேக்க நாட்டிலும், ரோம், மெசபடோமியாவிலும் இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பே உயிர்க்கொல்லி யுத்த முறை முழு வளர்ச்சி அடைந்திருந்தது. எதிரி நாட்டுக் குளத்திலும், கிணற்றிலும் நச்சுப் பொடியைத் தூவி, குடிநீரை விஷமாக்கி மக்களின் உயிரோடு விளையாடியிருக்கிறார்கள். கூடவே, தொற்றுவியாதியில் இறந்து போனவர்களின் உடலை, முற்றுகையிட்ட கோட்டைக்கு உள்ளே வீசி எறிவதும் நடந்திருக்கிறது. அல்லது, நோயாளியின் உடல் கழிவைத் தடவிய கல்லை மதில் சுவரைக் கடந்து வீசி, நோயைப் பரப்பி நாடு நகரங்களை அழித்திருக்கிறார்கள்.



இரண்டாம் உலக மகாயுத்த காலத்தில் ஜப்பானியர்கள் கிருமி ஆயுதம் உருவாக்க முழு மூச்சாகச் செயல்பட்டதாகத் தெரிகிறது. சீனாவை ஆக்கிரமித்து, அங்கே கைதிகளை வலுக்கட்டாயமாகப் பரிசோதனையில் ஈடுபடுத்தி, நச்சு ஆயுதங்களை உருவாக்கிச் செப்பனிட்டிருக்கிறார்கள். கைதி செத்தால்தான் ஆயுதம் சக்சஸ்! ஹிட்லரின் நாஜி ஜெர்மனி இன்னும் ஒருபடி கீழே போய், இரட்டையர்களான யூதர்களாகத் தேர்ந்தெடுத்து கொடூரமான டாக்டர்களிடம் அனுப்பியது.

1945-க்குப் பிறகு, ரஷ்யப் பூச்சாண்டி பயத்தைக் காட்டி, அமெரிக்கா ஆந்திராக்ஸ் நோய்க் கிருமி ஆயுதம் தயாரித்தது. ஏவுகணை மூலம் பரம எதிரியான சோவியத் யூனியனில் செலுத்தி, காற்றில் பரவச் செய்தால் குறைந்த செலவில் நிறைய உயிர் போகும். வியட்னாம் மீது அமெரிக்கா தொடுத்த அநியாயமான போரில் கலந்துகொள்ளாத அமெரிக்க பொது ஜனங்கள், இந்த

# டிஜிட்டல் கேண்டீன்

## இரா.முருகன்

மாதிரியான ஆயுதப் பரிசோதனைகளுக்கு உட்படுத்தப்பட்டதாக பரவலாக நம்பிக்கை. ரஷ்யர்களும் கையைக் கட்டிக் கொண்டிருக்காமல் கிருமி ஆயுதம் செய்து சேர்த்து அடுக்கினர்.

1970-களில் உலக நாடுகள் அனைத்திலிருந்தும் வெற்றிகரமாக ஒழிக்கப்பட்ட அம்மை நோய்க் கிருமி சாம்பிள்கள் அமெரிக்கா, சோவியத் லாபரட்டரிகளில் மட்டும் பத்திரமாகப் பாதுகாக்கப்பட்டு வந்தன. நோய் அழிந்தாலும், நோய் எதிர்ப்பு நடவடிக்கை எடுக்க எப்போதும் தயாரான நிலையில் இருக்க வேண்டும். அந்த ஆராய்ச்சிக்குக் கிருமி தேவைப்பட்டதே காரணம். சோவியத் வீழ்ந்த பிறகு மாஸ்கோவில் வைத்த அம்மைக் கிருமிகளில் சில, மற்ற நாடுகளுக்குக் கடத்தப்பட்டதாகத் தகவல். இவற்றைக் கிருமி ஆயுதமாக யாராவது பயன்படுத்த நினைத்தால் விபரீதம்தான்.

2001ஆம் வருடம் செப்டம்பர் பதினொன்றுக்குப் பிறகு அமெரிக்காவுக்கு கிருமி யுத்தம் பற்றிய கிலி அதிகரித்திருக்கிறது. அமெரிக்கா பயப்படும் கிருமி ஆயுதம் வைத்திருக்கும் நாடுகளின் பட்டியலில், இந்தியா



வும் பாகிஸ்தானும்கூட உண்டு. அண்டை நாட்டைப் பார்த்துப் பயந்தே அநேக உலக நாடுகள் அணு ஆயுதத்தோடு கிருமி ஆராய்ச்சியிலும் கோடிக்கணக்கில் பணம் செலவழிப்பதாகச் சொல்லப்படுகிறது.

கிருமி ஆயுத ஆக்கிரமிப்பை எப்படித் தடுப்பது? உண்ணும் சோறிலும் பருகும் நீரிலும் தின்னும் வெற்றிலையிலும் கிருமி கலந்தால் உடனே கண்டுபிடிக்க, சிக்கலான தொழில்நுட்பம் அமைந்த லாபரட்டரிகள் உருவாகியுள்ளன. ஏக்கர் கணக்கான கட்டடம் கட்டி இடத்தை அடைக்காமல் ஒரு பேனா சைஸில் இருக்கும் ஆராய்ச்சி சாலை இது. நானோ டெக்னாலஜி உபயம். ●

# ஆயுர்வேத ரகசியம்!



நோய்க்கான மூலாதாரம் என்னன்னு கண்டு பிடிச்சு, திரும்பவும் அந்த நோய் வராம பார்த்துக்கிற வேலையைத்தான் ஆயுர்வேதம் செய்யுது!

பெரும்பாலான நோய்களுக்கு, முறையற்ற உணவுப் பழக்கம், உடல் உழைப்பு குறைஞ்சு போறது, உடம்பு குறித்த விழிப்புணர்வு இல்லாததுதான் காரணம்!





# ஆப்ரேஷனுக்கு

"நம்ம இந்திய மருத்துவமுறைகள், இன்னைக்கு உலகம் முழுக்க வேகமா வளர்ந்து வர்றதுக்குக் காரணம் என்னன்னா, அலோபதி டாக்டர்கள் கைவிட்ட நோய்களுக்கு, நம் பாரம்பரிய மருத்துவம் சரியான தீர்வாகவும் நிரந்தரமான தீர்வாகவும் இருக்கறதுதான்'' என்கிறார் ஸ்ரீ வர்மா மருத்துவமனையின் ஆயுர்வேத டாக்டர் வேல்மணி.

''இந்த நவீன யுகத்தில் வேலை வேலைன்னு பரபரப்பா ஓடற சூழல்ல, நோய்ன்னு டாக்டர்கிட்டே போனா, டாக்டரும் அதே அவசரத்தோட, அஞ்சு நிமிஷத்திலே நோயாளியைப் பார்த்துட்டு, அடுத்த பேஷன்ட்டை வரச் சொல்லுங்கன்னு சொல்ற டாக்டர்கள் அதிகமாயிட்டு வர்றாங்க.

இங்கிலீஷ் மருந்துகள் பெரும்பாலும் அந்த நேரத்துக்கான உடனடி நிவாரணம்தான் தருது. ஆனா வர்ற பேஷன்ட்டுக்கு என்ன வியாதின்னு முழுக்க தெரிஞ்சு,

உடம்புக்கு ஏதாவது நோய் வந்தா மட்டும்தான் நாம டாக்டர்கிட்டே போறோம். நோய் நொடி வராமல், வாழ்க்கையை எப்படி மகிழ்ச்சியா வாழணும்ங்கிற வரை முறைகளை, ஆயிரம் வருஷங்களுக்கு முன்னமே நம் பாரம்பரிய வைத்தியங்கள் சொல்லியிருக்கு. ஆனா, நாமதான் அதையெல்லாம் விட்டுட்டு ஆப்ரேஷன்,

ட்ரான்ஸ்ப்ளான்டேஷன்னு அலோபதி பின்னால ரொம்ப அவசர அவசரமாய் ஓடிக்கிட்டிருக்கோம்'' என்கிறார் டாக்டர் வேல்மணி.

''ஆப்ரேஷனே தேவையில்லேன்னு சொல்றீங்களா?'' என்றால், ''தேவையில்லாத விஷயங்களுக்கு ஆப்ரேஷன் பண்ணிக்காதீங்கன்னுதான் சொல்ல வர்றேன்!'' எனத் தெளிவாகச் சொல்லி சிரிக்கிறார்.



● டாக்டர் வேல்மணி



# 'நோ!'

''உதாரணமா, எலும்பு தேய்மானம்னு மாற்று மூட்டு ஆப்ரேஷன் செஞ்சுக்கிற ஒருத்தர், பழையபடி தன் இயல்பான நிலைக்கு வந்துட்டாருன்னு சொல்ல முடியுமா? அப்பவும் அவருக்கு வலி தொடரத்தானே செய்யுது! ஆப்ரேஷன் உடனடி தீர்வா இருந்தாலும், நிரந்தர தீர்வா இல்லேங்கிறதுதான் நிதர்சனம்!



ஆனா, இங்கேதான் ஆயுர்வேதம் அற்புதமா செயல்படுது. எலும்பு மஜ்ஜை என்று சொல்லக்கூடிய, ஒரு பசைதிரவம் குறைஞ்சு போகிறதால தான் மூட்டு வலியும், தேய்மானமும் வருது. மீண்டும் எலும்பு மஜ்ஜையை வேகமாகச் சுரக்கச் செஞ்சு, எலும்புகளை இயல்பான நிலைக்குக் கொண்டு வர்ற அற்புதம், ஆயுர்வேதத்துக்குச் சாத்தியமாக இருக்கும்போது ஏன் ஆப்ரேஷன்?

முன்னெல்லாம் இயற்கையான உணவுப் பழக்கம் இருந்துச்சு. நல்ல சாப்பாடுன்னு பார்த்தீங்கன்னா, கீரை மசியல், கிழங்கு பொரியல், காய்கறி கூட்டுன்னு சரிவிகித உணவு முறை இருந்துச்சு. ஆனா, இன்னைக்கு அவசர அவசரமா வேலைக்குப் போற அம்மாக்களுக்கு. கீரை ஆய்ஞ்சுக்கிட்டு உட்கார நேரம் எங்கே இருக்கு?

குழந்தைகளுக்கு லஞ்ச் பாக்ஸ்ல பிரட், சிப்ஸ், நூடுல்ஸ்னு கொடுத்தனுப்புற தாய்மார்கள் நிறையவே இருக்காங்க. இந்த 'ஜங்க் ஃபுட்ஸ்' சாப்பிடற குழந்தைகளுக்கு ஆரோக்கியமான வாழ்க்கைங்கறது கேள்விக்குறிதான்!

மூட்டு வலி, முதுகு வலி, கழுத்து எலும்பு தேய்மானம், நரம்பு மண்டல வியாதிகள், கிட்னி ஃபெயிலியர், கிட்னி ஸ்டோன், பெண்களின் மாதவிடாய் கோளாறு, கருத்தரிப்பு பிரச்னை, பக்கவாதம்... போன்ற வியாதிகளுக்கும் தீர்வு சொல்ற ஆயுர்வேதம், நம் ஆயுள் விருத்திக்கான ஓர் அற்புத வைத்தியம்!'' என்று சொல்கிறார் டாக்டர் வேல்மணி.



– எம்.ஆர்.ஆர்.





**சு**னாமிக்கே 'லகான்' போட்டவை இந்த 'லகூன்' காடுகள். Mangroves எனப்படும் முத்துப்பேட்டை அலையாத்திக் காடுகள். தமிழகத்தின் மிகப் பெரிய சதுப்புநிலக்காடு, சுமார் நூற்றியிருபது சதுர கி.மீ. பரப்பில் சுழித்தோடும் தண்ணீரும் அடர்ந்து கிடக்கும் அலையாத்தி மரங்களுமாகக் காட்சியளிக்கின்றது. சுனாமியின் போது முத்துப்பேட்டையிலிருந்து கிழக்கே முப்பது கி.மீ., மேற்கே முப்பது கி.மீ. நீளம் என, சுமார் அறுபது கி.மீ. தூர கடற்கரைப் பகுதிகளில் எவ்வித பாதிப்பும் ஏற்படவில்லை. அலையாத்திக் காடுகளின் அருமை, நமக்குத் தெரிய வந்தது அப்போதுதான்.

''நகவினியாறு முதல் மரைக்கான் கோரையாறு வரை, காவிரியின் ஏழு கடைமடை ஆறுகள் இப்பகுதியில் கடலில் வந்து கலக்கின்றன. காவிரியின் நன்னீரும், உப்புக் கடல்நீரும் சேர்கின்ற நீர் நிலப்பகுதிகளில் அலையாத்தி மரங்கள் அடர்த்தியாக வளர்கின்றன. மரத் தாவர வகைகளில் இது மிகவும் அபூர்வமானது. மூன்று வகையான வேர்கள் கொண்டவை. பச்சை வண்ணக் குடைகள் போல, நிலப்பரப்பில் கவிழ்ந்திருக்கும் அலையாத்திக் காடுகள் இயற்கையே அமைத்துத் தந்துள்ள அரணாக நமக்கு விளங்கி வருகின்றன!'' எனக் குறிப்பிடுகிறார் முத்துப்பேட்டை சித்த வைத்தியர் செல்வராஜ்.

**கோ**ரையாறு கழிமுகப் பகுதி படகுத் துறை. தமிழக அரசின் வனத்துறை படகு. (தனியார் படகுகளும் இருக்கின்றன. அதில் ஐந்து பேர் போனாலும், இருபது பேர் போனாலும் குழுவினரின் பயணத்துக்கு எழுநூற்றைம்பது ரூபாய் படகுக் கட்டணம்!). நீரைக் கிழித்தபடி சீறிப் பாய்கிறது படகு. ஒரு குறிப்பிட்ட தூரத்துக்கு அப்பால், எங்கு நோக்கினும் தண்ணீர்! ஆங்காங்கு திட்டுத் திட்டாய் அலையாத்திக் காடுகள். கண்ணுக்கெட்டிய தூரம் வரை பசுமை மரக்காடுகளையும், அவற்றைச் சுற்றிச் சுழித்தோடும் கடல் நீர் வெள்ளத்தை காணலாம். ஆயிரமாயிரம் மலைப்பாம்புகள் இடைவெளிகள் விட்டு விட்டு பின்னிப் பிணைந்திருந்தால் எப்படி இருக்கும்? அவ்விதம் இருக்கின்றன கடல் நீரும் அலையாத்திக் காடுகளும்!

''**சு**த்து வட்டார நாப்பது கிராமத்தாளுங்களுக்கு, கடல்ல வந்து மீன் பிடிக்கறதுதான் முக்கிய தொழில். படகுல போயி மீன் பிடிக்கறவங்களும் இருக்காங்க. என்னியப் போல இந்த 'லகூன்'ல நீந்தியும் நடந்தும் போய் மீன் பிடிக்கற வங்களும் இருக்காங்க. எப்படியும் ஒரு நாளைக்கு இரு நூறு - முன்னூறு ரூபாய்க்கு மீன் பிடிச்சிடுவேன்!'' என்கிறார் செங்காங்காடு கிராம மீனவர் ராஜமாணிக்கம்.

### சில்லென ஒரு சிற்றுலா

# அலை உறங்கும் அலையாத்தி!



மீனவர்களுக்கு மட்டுமல்ல, கண்டு களிக்க வருபவர்களுக்கும் இந்த அலையாத்திக் காடுகள், பசுமை சொர்க்கமாக இருந்து வருகிறது. ''படகிலே ஏறி அலையாத்திக் காடுகளைக் காண்பது ஒரு பரவச அனுபவம். எங்களுக்குக் கல்யாணமாகி அஞ்சு நாள்தான் ஆவுது. ஜாலியா டூர் போவணும்னு யோசிச்சாங்க எங்க ரெண்டு வீட்டுலயும். அதான் நாங்க இங்கன கிளம்பி வந்துட்டோம். பச்சைப் பசேல்னு மரங்கள். எங்களோட வாழ்க்கையும் பசுமையா இருக்குமில்லே!'' என நம்பிக்கையுடன் கூறுகின்றனர் தில்லைவிளாகம் பகுதியிலிருந்து வந்திருந்த புதுமணத் தம்பதிகளான கலா-சங்கர்.

''மீன் பிடி படகுல டிரைவரா போனாலும், இது போல படகுல டிரைவரா வந்தாலும் ஒரே சம்பளம்தான். ஜாலியா இருக்கட்டுமேன்னு நான்தான் சுற்றுலா படகுல டிரைவரா வந்துட்டேன். அஞ்சு வருஷமா படகு ஓட்டி வர்றேன். டெய்லி நூத்திஇருபது ரூபா சம்பளமா கெடைக்குது!'' என்கிறார் தனியார் படகு டிரைவரான சாகுல் ஹமீது.

அலையாத்திக் காடுகளைப் பார்வையிட வருவோர்க்கென வெவ்வேறு ஆறு முனைகளில், ஓய்வு அரங்கு மற்றும்

**“இது ஒன்றும் பொழுதுபோக்கு சுற்றுலா மையம் அல்ல. நமக்கு இயற்கையாகவே அமைந்திருக்கும் பாதுகாப்பு அரண். ஆயிரக்கணக்கான மீனவர்களுக்கு முக்கியமான மீன்பிடி கேந்திரம்”**

செல்வராஜ்



கல்யாணசுந்தரம்

ராஜமாணிக்கம்

நடைபாதைகளை அமைத்திருக்கிறது தமிழக வனத்துறை. சேத்துக்குடா முனைக்கு வந்திருந்தனர் அதிராம்பட்டினம் கல்லூரி மாணவர்கள். "எம்.காம். இறுதியாண்டு கடைசி செமஸ்டரை நெருங்கிவிட்டோம். இனிமேல் நாங்கள் ஒன்றிணைவது சற்று கடினம். அதனால்தான் மனத்தைவிட்டு அகலாத 'டூராக' இருக்கட்டுமென்று, அலையாத்திக் காடுகளைப் பார்க்க வந்துவிட்டோம்!" எனக் கோரஸாகக் குரல் தந்தனர் அவர்கள் அனைவரும்.

அலையாத்திக் காடுகள், வெறும் சுற்றுலா மையமா? என்கிற கேள்வியும் இங்கே எழுகிறது.

"இது ஒன்றும் பொழுதுபோக்கான சுற்றுலா மையம் அல்ல. முதலில் இது, நமக்கு இயற்கையாகவே அமைந்திருக்கும் அரண். இரண்டாவது, பல்லாயிரக் கணக்கான மீனவர்களுக்கு இது மிக முக்கியமான மீன் பிடி கேந்திரம். காரணம், நீர் நிலைகளில் வேர்கள் பரப்பி வளர்ந்திருக்கும் அலையாத்தி மரங்கள், மீன் மற்றும் கடல் வாழ் உயிரினங்களின் இன விருத்திக்கு மிக மிக உதவிகரமாக இருந்து வருகின்றன. தமிழக வனத் துறையின் கட்டுப்பாட்டில் இருந்து வரும் அலையாத்திக் காடுகளை, கடந்த ஐந்தாறு வருடங்களாக சுற்றுலா மையமாக அறிவிக்க முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. சுற்றுலா மையமானால், இங்கு வந்து செல்பவர்களின் எண்ணிக்கை பெருகிவிடும். அலையாத்திக் காடுகளின் இயற்கையான தூய்மை கெட்டுப்போகும். மீன்களின் பெருக்கமும், பறவைகளின் வருகையும் பெருமளவில் குறைந்துவிடும். சுற்றுலா மையமாக அறிவிக்கக்கூடாது என பல கட்டங்களாக நாங்கள் போராடி வருகிறோம்!" எனச் சொல்கிறார், சுற்றுச் சூழல் அமைப்பின் தஞ்சை மாவட்டத் தலைவர், தாமரங் கோட்டை கந்த கல்யாணசுந்தரம்.

வனக் காவலர்கள்



செய்தியும் சித்திரங்களும் :
**ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

**செல்லும் வழி :** சென்னையிலிருந்து பட்டுக்கோட்டை சென்று அங்கேயிருந்து 8 கி.மீ. தூரத்தில் உள்ளது. திருத்துறைப்பூண்டி வழியாகவும் செல்லலாம்.

**செலவு :** ஒரு குடும்பத்தோடு சென்று வர ரூ.2,000 வரை செலவாகும். படகு சவாரிக்கு தனிக் கட்டணம் செலுத்த வேண்டும்.

**தங்குமிடம் :** முத்துப்பேட்டையில் போதிய வசதியில்லை. பட்டுக்கோட்டை, திருத்துறைப்பூண்டி மற்றும் திருவாரூர் போன்ற இடங்களில் வசதியான தங்குமிடம் உள்ளது.



# அன்பே ஆயுதம்

**'கற்றது தமிழ்' படத்தின் மூலம் தமிழ் சினிமாவில் அறிமுகமான நடிகை அஞ்சலிதான் 'ஆயுதம் செய்வோம்' படத்தின் கதாநாயகி. அவர் நம்மிடம் பேசியதிலிருந்து...**

"என்னடா இது... தலைப்புல 'ஆயுதம் செய்வோம்'னு இருக்கே... இதென்ன ஆக்ஷன் படமான்னு கேட்டா, அடிப்படையில அன்பை யாசிக்கற படம்னுதான் சொல்வேன். ரௌடி கையில இருக்கற துப்பாக்கிக்கும், ராணுவ வீரன் கையில் இருக்கற துப்பாக்கிக்கும் நிறைய வித்தியாசம் இருக்கு. ஆனா, இந்தப் படத்துல அன்பையே ஆயுதமா எடுத்துக்கிட்டு, சக மனிதனோட துக்கங்களைப் போக்க முற்படுகிற மென்மையான கதை. சுந்தர்.சி மிகப் பெரிய இயக்குநர்; ரஜினியை இயக்கியவர். அவருக்கு ஜோடியாக நடிக்கறதுல எனக்குப் பெருமை தான். ஒவ்வொரு காட்சியையும் அருமையா உள்வாங்கிக்கிட்டு நடிக்கிறார். ரௌடியா இருக்கிற ஒருவனை ராணுவ வீரனா மாத்தற கதையில, என் கேரக்டரோட பங்கு அதிகம். ஸ்ரீதேவி மாதிரி வித்தியாசமான கேரக்டர்ஸ் பண்ணணும்னு எனக்கு ஆசை. என்னோட சினிமா லைஃப்ல, 'ஆயுதம் செய்வோம்' நிச்சயம் ஒரு நல்ல பேரை வாங்கிக் கொடுக்கும்" என்கிறார் அஞ்சலி.

'ஆயுதம் செய்வோம்' படத்தை எழுதி இயக்கியிருக்கும் இயக்குநர் உதயன், விஜயகாந்த் நடித்த 'பேரரசு' படத்தை இயக்கியவர். இந்தப் படத்தில் இரண்டு பாடல்களை எழுதி, பாடலாசிரியர் அவதாரமும் எடுத்திருக்கிறார்.

– கமலி



''மாமூல் குடுக்கற தைரியத்துல கபாலி எல்லை மீறிப் போறான்!''
''என்ன விஷயம்?''
''புதுசா அவன் கட்டியிருக்கற வீட்டுக்கு 'காவல் நிலையம்'னு பேர் வச்சிருக்கான்!''

- அம்பை தேவா

''பேஷன்டைப் பார்த்ததும் டாக்டர் ஏன் குஷியில துள்ளிக் குதிக்கறார்?''
''பேஷன்ட் பாக்கட்ல இருக்கற ஆயிரம் ரூபா நோட்டு பளிச்சுன்னு தெரியுதே, அதான்.''

- என்.எஸ்.பாலசுப்பிரமணியன்

''பாட்டும் நானே... பாவமும் நானே...''
''நோ... நோ... பாட்டு நீங்க! பாவம் நாங்க!''

- தஞ்சை தாமு



''ஓட்டுக் கேட்டு, கட்சிக்கு முக்கிய தகவலைக் கொடுத்ததால் அவனுக்குப் பதவியாமே!''

''இந்த விஷயத்தில் தலைவர் ஏமாந்துட்டாரு!''

''எப்படிச் சொல்ற?''

''அவனுக்குத்தான் சுத்தமா காது கேக்காதே, மச்சி!''

- பி.ஜி.பி. இசக்கி

''கறுப்பு நாய்க்குச் சோறு போட்டியா சரசு?''

''ஆமா, ஏன் கேக்கறீங்க?''

''இல்ல... ரோட்டு முனையில் செத்துக்கிடக்கு. அதான் கேட்டேன்!''

- சீர்காழி வி.ரேவதி



# தலைவரின் 'தொலைநோக்கு'..!



''தொலைநோக்குப் பார்வை இல்லைன்னு சொல்ற, எதிர்க்கட்சிக்காரங்க பொய்ப் பிரசாரத்தை முறியடிக்கத்தான், இன்னைக்குத் தலைவர் பைனாகுலரோடு வந்திருக்காரு!''

- ஆலன் டேவிட்ராய்



*எதிர்வரும் வைகாசி அனுஷம் (30.5.08), மகா பெரியவாளின் ஜன்ம நக்ஷத்திர சுபதினம். இந்நேரத்தில் தமது தலை தீபாவளியன்று மகா பெரியவாளைச் சந்தித்து ஆசி பெற்ற அனுபவத்தை, நம்மோடு பகிர்ந்து கொள்கிறார், கல்கி நிறுவன தலைமை அக்கவுண்ட்ஸ் மேனேஜர் மோகனன்...*



"கல்கி ஸ்தாபன இயக்குநர் (1979) திரு. முரளி, இரண்டு தீபாவளி மலர் பிரதிகளைக் கொடுத்து 'மோகன்... நீதான் தலை தீபாவளிக்கு உனது மாமனார் ஊரான பெல்காம் போகிறாயே, அங்கேதான் நமது பெரியவா குருதேவ் மந்திரில் சாதுர்மாஸ்யம் தொடங்கி இருந்து வருகிறாராம்... இந்த தீபாவளி மலர் பிரதிகளை பெரியவாளுக்கு நமது ஸ்தாபனம் சார்பாகச் சமர்ப்பித்து, நமஸ்காரங்களைத் தெரிவித்து வாருங்கள்' என்றார்.

நானும் எனது மனைவியும் தீபாவளிக்கு முன்தினம் மாலை பெல்காம் போய்ச் சேர்ந்தோம். நான் கல்கி அலுவலகம் சம்பந்தப்பட்ட விஷயமாக பெரியவாளைப் பார்க்கணும் என்று என் மாமனாரிடம் கூறினேன். "இன்னும் ஒரு நாள் முன்னாடி வரக்கூடாதோ... பெரியவா, பெல்காமிலிருந்து கிளம்பிவிட்டாரே" என்றவர், "சரி சரி... கொஞ்சம் பொறுங்க... இதோ வருகிறேன்" என்று கூறிச் சென்றார். சுமார் ஒரு மணி நேரம் கழித்து வந்தவர்,



'எனக்குத் தெரிந்த திருவாளர் பாலகோபாலன் (பெல்காம் டிவிஷனல் கமிஷனர்) தமது குடும்ப சகிதம் தீபாவளியன்று காலை பெரியவாளைப் பார்க்கப் போறார்... நீங்களும் அவர்களுடன் போங்க' என்றார். காலை 7 மணிக்கு அவரது பங்களாவில் நாங்கள் இருந்தோம்.

சுவாமிகள் தங்கியிருந்த கோயிலை நாங்



* ஓவியர் வினு



* மோஹன்

கள் சென்றடைந்தோம். சிறிய அறையி லிருந்து ஒளியே வடிவமாக வெளிவந்தார். எங்கள் முன்னே மணையைப் போட்டுக் கொண்டு அமர்ந்தார். நானும் எனது மனைவியும் பெரியவாளுக்கு நமஸ் காரங்களைச் சமர்ப்பித்து எழுந்தோம். ஸ்ரீ மடத்தைச் சார்ந்த ஒருவர் பெரிய வாளிடம் கல்கி மலர் பிரதிகளை அன்னா ருக்கு நான் சமர்ப்பிக்க வந்துள்ளதையும் தெரி வித்தார். என்னை உற்று நோக்கிய அந்த நடமாடும் தெய்வம், என்னிடம் கேட்ட முதல் கேள்வி... ''ராஜேந்திரன் எப்படி இருக்கான்?'' என்பது தான்.



நான் அவர் அரு கில் அமர்ந்து, 'கல்கி' மலரின் ஒவ்வொரு பக்கத்தையும் திருப்பி யபடி இருக்க... பெரி யவாள் அவற்றைப் பார்த்துக் 'கொண்டே வர, 'கோயிலில், தெய் வத்தின் முன் நாம் இருக்கிறோம்' என்ற உணர்வு எனக்குள் எழுந்தது. இப்போது நினைத்தாலும் புனித பரவச நிலையை ஏற்படுத்தும் உன்னத தருணங்கள் அவை. மலர் பிரதியின் அட் டையில் ஒளிர்ந்த முருகனின் சித்திரத்தைப் பார்த்து ''சுப்ர மணியனா...?'' ''இது - வினு வரைந்ததா...?'' என்று அவர் கேட்டபடி இருக்க... நான் மலர் பிரதியின் பக்கங் களைப் புரட்ட, art card mountல் பெரிய வாளின் திருவுருவைப் பார்த்து, ''இது நானாக்கும்...'' என்று தம்மைக் காண்பித் துக்கொண்டும்... மேலும் பக்கங்களை நான் புரட்டுகையில் - பாரதியின் கவிதை வரிகள் என ஞாபகம்... அதைப் படிக்க என்னைப் பணித்ததும் - ஓரிடத்தில் ராஜஸ்தான் பற்றிய கட்டுரையில் பளிங்குப் பாறைகள் பற்றிய புகைப்படத்தைச் சுட்டிக்காட்டி, ''இது என்ன?'' என பெரியவா என்னை வினவியபோது, பக்கத்திலிருந்த டிவிஷ னல் கமிஷனர், ''அது marble rocks" என்று சொன்னபோது, ''நீ இதைப் பார்த் துட்டியா?'' என்று கேட்டு நிமிர்ந்தார் பெரியவா.

புனிதமான தருணங்கள் நகர்ந்ததே தெரியாமல் மெய்மறந்து நாங்கள் அமர்ந்தி ருக்க, வாதாபியைப் பற்றியும், அவ்வூரில் உள்ள விநாயகப் பெருமானைப் பற்றி தான் முத்துஸ்வாமி தீக்ஷிதர் 'வாதாபி கணபதிம்' எனத் தொடங்கும் கீர்த்த னையை இயற்றினார் என்றும்கூறி, அப் பாடலின் ஓர் அடியை எங்களுக்குப் பாடிக் காண்பித்தும்... ஓ! எப் பேர்ப்பட்ட மெய் சிலிர்க்க வைக்கும் நிமிடங்கள் அவை.

பிறகு பெரியவாள், டிவிஷனல் கமிஷன ரைப் பார்த்து, ''உனது பரிவாரங்கள் எல்லாம் காத்திருக்கும், கிளம்பு...'' என்று உத்தரவு கொடுத்ததும், பாலகோபாலன் அகத்து மாமியும் எனது மனைவியும் சேர்ந்து பெரியவாளுக்கு ஆரத்தி எடுத்தனர். மீண்டும் பெரிய வாளுக்கு நமஸ்காரங்களைச் சமர்ப்பித்து, விடைபெற்று வந்தோம்.''

***ஜெய ஜெய சங்கர:ஹர ஹர சங்கர:***

**- பா.வெ.மோஹன்**

# செழிப்பைத் தந்த செண்டு மல்லி!

''நாங்க இங்ஙன பத்தரை ஏக்கரா தோட்டத்தை குத்தகைக்குப் பயிர் பண்ணிட்டு வர்றோமுங்க. மனுஷன் ஏமாத்துனாலும் இந்த மண்ணு நம்பளை ஏமாத்தாதுன்னு சொல்வாங்க. அஞ்சு வருஷத்துக்கு முன்னாடி இந்த மண்ணும் எங்கள ஏமாத்திச்சு. பரவலா மழை மாரி பெய்யாமப் போன காலம். விதை தெளிச்சு நாத்து வுட்டாரு. அந்தப் பஞ்ச காலத்துல செண்டு மல்லி ஜோரா பூத்துச்சு. பள்ளம் பார்த்து ஓடிப் போன எங்க வருவாயும், மேடு ஏறி வந்து உசர ஆரம்பிச்சது!'' என்று வெள்ளந்தியாகப் பேசுகிறார் ரெத்தினம் என்கிற பெண் விவசாயி.

கோவையிலிருந்து இருபது கி.மீ. தூரத்தில் பொள்ளாச்சி சாலையில் சற்று உள் நோக்கியுள்ளது மயிலேறிபாளைய கிராமம். அங்கு விவசாயத் தம்பதியான பொன்னுச்சாமியும் ரெத்தினமும் மலர் சாகுபடி செய்து வருகிறார்கள்.

''பெங்களூரு செண்டு மல்லி மஞ்சள் நிறத்துல இருக்கும். அது கம்பெனிப் பூ. நம்மூரு செண்டு மல்லி ஆரஞ்சு நிறத்துல கண்ணைப் பறிக்கும். இத நாட்டுப் பூவுன்னு சொல்லுவாங்க. இதுல நம்மூரு செண்டு மல்லிக்குத்தான் வாசனை அதிகம். ரொம்ப பேருக்கு ஒரு குழப்பம் வந்துடும். செவந்திப் பூ வேற, இந்த செண்டு மல்லி வேற. மலர் சாகுபடியில் நல்ல லாபம் தரக் கூடியது இந்த செண்டு மல்லி'' என்கிறார் ரெத்தினம்.

செண்டு மல்லித் தோட்டத்தில் நம்மை நிறுத்தி, ''மத்த பூக்களுக்குத்தான் பட்டம் உண்டு. செண்டு மல்லிக்குப் பட்டமே கிடையாது. இதை எந்தக் காலத்திலும் விதைக்கலாம். காரணம், இதுக்கு தண்ணீர் செலவு, சாகுபடி செலவு ரொம்பக் குறைவு. விதை தெளிச்ச தொண்ணூறு நாள்ல தாய்ப்பூ மலரும். அதுலேந்து

**மத்த பூக்களுக்குத்தான் பட்டம் உண்டு. செண்டு மல்லிக்குப் பட்டமே கிடையாது. இதை எந்தக் காலத்திலும் விதைக்கலாம்.**

அறுபது நாள் பூத்துக்கிட்டேயிருக்கும். தினசரி நாத்தைம்பது கிலோ செண்டு மல்லி அறுவடை பண்ணலாம். மார்க்கெட்லயும் இதுக்கு நல்ல கிராக்கி. கூலியாளும் ரொம்பத் தேவையில்லை. வீட்டாளுங்களே ரெண்டு பேரு பறிச்சாப் போதும்'' என, தன் தோட்டத்தைக் காட்டி, 'சோர்ந்து போன மனசுக்கு சொர்க்கம் தரும் செண்டு மல்லி' என்கிறார், விவசாயி பொன்னுச்சாமி.

**செய்தியும் சித்திரங்களும்: ட்ராக்டர் தம்பி**



• பொன்னுச்சாமி





# 'எச்சில்' ஓர்



எச்சில் என்ற வார்த்தையை ஏதோ அருவருப்பான ஒன்றாக நினைப்பவரா நீங்க? முதல்ல அந்த நினைப்பை மாத்திக்குங்க. எச்சில் ஓர் அமுதம் என அறிவியல் அர்த்தத்திலே சொல்லலாம்.

எத்தனைவிதமான உணவுகளை நாம் வாயில் போட்டுக்கொள்கிறோம் என்பதைக் கொஞ்சம் யோசித்துப்பாருங்கள்? பிஸ்கெட், கேக், இட்லி, வெங்காய தோசை, முறுக்கு... இப்படி மிருதுவாகவும் கடினமாகவும் வாய்க்குள் செலுத்துகிறோம். ஆனால், தொண்டைக்குள் செல்லும்போது இவை எல்லாமே ஓரளவாவது மிருதுவாக இருந்தாக வேண்டும் (கரடு முரடாக இருந்தால் தொண்டைச் சதை என்ன ஆவது?). அதற்குக் கை கொடுப்பதுதான் எச்சில்.

சின்னச் சின்னக் குழாய்கள் மூலமாக வெளிப்படும் எச்சில், பிறகு இணைந்து பெரிய குழாய் வழியாக வாய்க்குள் வந்து சேர்கிறது. எச்சில் என்பது தண்ணீர் மட்டுமல்ல. இதில் எலெக்ட்ரோலைட்டுகள் உண்டு. ஜீரணத்துக்கு உதவும் என்ஸைம்கள் உண்டு.

அது மட்டுமில்லே. எச்சிலிலே பொட்டாஷியம் உண்டு. சோடியம் உண்டு. முக்கியமாக, எச்சிலில் உள்ள பைகார்பனேட்களின் பங்கு மகத்தானது. இரைப்பையில் சுரக்கக்கூடிய மிக அதிகமான அமிலங்களை ஓரளவு சமன்படுத்துவது இதுதான்.

எச்சில் எங்கிருந்து சுரக்கிறது? நாக்குக்குக் கீழே சில எச்சில் சுரப்பிகள் உள்ளன. காதுகளும் கீழ்த் தாடையும் சந்தித்துக் கொள்ளும் இடத்தில், சில எச்சில் சுரப்பிகள் உள்ளன.

வாய் என்பது ஒரு வாட்டமான அறை. இங்கே ஜீரணம் தொடங்குகிறது. ஏதோ ஒப்புக்கு அல்ல, நம் ஜீரண மண்டலத்தில் மிக முக்கியமான பகுதி இது. சக்திமிக்க பற்களும், நன்கு சுழலக்கூடிய நாக்குமாக ஒரு கிரைண்டரைப்போலச் செயல்படுகிறது வாய். கல்லுரலில் தோசைக்கு மாவு அரைக்கும்போது தேவையான தண்ணீரைச் சேர்ப்பார்கள் இல்லையா? இயற்கை தானாகவே அந்தச் சேர்க்கையை (எச்சிலை) உற்பத்தி செய்து தொடர்ந்து அதைப் பராமரிக்கிறது.

ஒரு நாளைக்கு 1,500 மில்லிலிட்டர் எச்சில் சுரக்கிறது நம் வாயில்.

நாக்கையும் பற்களையும் செயல்படுத்துவதில் மூளையின் பங்கு மிக

டாக்டர் எம். ராஜேந்திரன்

# உயிர்த்திரவம்!

முக்கியம். வாயில் முறுக்கு, பக்கோடா, நான்வெஜ் ஐட்டங்கள் வந்து சேர்ந்த உடனேயே மூளை 'நல்லா மெல்லு. அப்புறமாக உள்ளே அனுப்பு' என்று பற்களுக்கு சிக்னல் கொடுக்கிறது. பார்வை இழந்தவர்களுக்கு நாக்கு இந்த விதத்தில் மேலும் உதவுகிறது. உங்கள் கண்களை மூடியபடி வாய்க்குள் எதையோ திணித்தால்கூட, நாக்கு அந்த உணவின் தன்மையை (மிருதுவானதா கடினமானதா) உணர்ந்துகொண்டு அதற்குத் தகுந்த மாதிரி எச்சிலைச் சேர்த்து, அதற்குரிய நோக்கத்துக்கு வாய்ப் பகுதியில் அந்த உணவைத் தங்க வைக்கிறது.

பொன்னுக்குவீங்கி என்று நாம் குறிப்பிடும் நோய், ஏதோ தங்கம் வேண்டும் என்று நம் கழுத்து டிமாண்ட் செய்வதாக அர்த்தம் இல்லை. காதுகளுக்குக் கீழ்ப்புறம் தொற்றுக் கிருமிகளால் பாதிப்பு ஏற்பட, எச்சில் சுரப்பிகளில் அடைப்பு ஏற்பட்டு எச்சில் தேங்கத் தொடங்கிவிடுகிறது. இதனால்தான் வீக்கம்.

எவ்வளவு எச்சில் சுரக்கவேண்டும், அது எந்த அளவுக்கு நீர்த்தோ அடர்த்தியாகவோ இருக்கவேண்டும் என்பதையெல்லாம் தீர்மானிப்பது, நம் உடலின் தானியங்கி நரம்பு மண்டலம்தான்.

எச்சில் மட்டும் சுரக்கவில்லை என்றால், உணவுப் பொருட்கள் அடிக்கடி தொண்டையில் மாட்டிக்கொண்டு கடும் வேதனை தரும்; உணவுப் பொருளின் உட்புறம் உள்ள ருசியை நம்மால் சரியாக உணர முடியாது; வாய்ப் பகுதியில் பலவித நோய்கள் உருவாகும். சூடான உணவுப் பொருட்களைக் கூலாக்கி, நாக்கு பாதிக்காமல் இருக்கவும் எச்சில் உதவுகிறது.

அதற்காக மற்றவர்கள் எச்சில் செய்த பண்டங்களை நாம் சாப்பிடலாமா..? நட்புக் குழுக்களில் சகஜமாகவுள்ள இப்பழக்கம் சரியா தவறா? அதனால் கிருமிகள் பரவாதா? அசுத்தம் இல்லையா?

அடுத்த வாரம் சொல்கிறேன்.

எழுத்து வடிவம் : **ஆதர்ஷ்**

**நியூ டேஸ்ட்டி ட்ரீட் - 7**

**கூலா சாப்பிடுங்க!**





• 'பாண்டியன்' படத்தில் ரஜினி – குஷ்பு



**ஏவி**.எம்.மின் 'ராஜா சின்ன ரோஜா' படப்பிடிப்பின்போது ரஜினி, கௌதமி மற்றும் குழந்தைகள் மட்டுமில்லாமல் கார்ட்டூன் கதாபாத்திரங்கள்கூட முழுமையான ஒத்தழைப்பு கொடுத்தாலும், எங்களுடன் ஒத்துழைக்க மறுத்தவர் யார் தெரியுமா? திருவாளர் வானிலைதான்! படத்தின் பெரும்பாலான பகுதிகளை ஊட்டியில்தான் படம் பிடித்தோம். முதல் முறை மொத்த படப்பிடிப்புக் குழுவும் ஊட்டிக்குப் போய் இறங்கிவிட்டோம். ஆனால், திட்டமிட்டது போல படப்பிடிப்பை நடத்தி முடிப்பதற்கு ஏற்ற வானிலை இல்லை. எனவே, திட்டமிட்டதில் பாதியைத்தான் முதல் ஷெட்யூலில் படம் பிடிக்க முடிந்தது. ஏமாற்றத்துடன் திரும்ப நேரிட்டது.

அடுத்த கட்ட படப்பிடிப்புக்காக ஊட்டி புறப்பட்டோம். 'இதே ஷெட்யூலில் வானிலை நன்றாக இருக்கும்; முதல் ஷெட்யூலில் எடுக்க முடியாமல் போன காட்சிகளையும் சேர்த்து எடுத்து முடித்துவிடலாம்' என்று நம்பினோம்; இந்தத் தடவை, வானிலை எங்களை மோசம் செய்யவில்லை என்றாலும், எடுக்க வேண்டிய காட்சிகள் அனைத்தும் எடுத்து முடிக்க முடியவில்லை; மூன்றாவது முறை ஊட்டி சென்ற போது, மீதமுள்ள காட்சிகளை எடுத்து முடித்தோம். குழந்தைகளை வைத்து, குழந்தைகளுக்காக எடுக்கப்பட்ட ரஜினி படமான 'ராஜா சின்ன ரோஜா', குழந்தைகள், பெரியவர்கள் அனைவரையும் கவர்ந்து, வெள்ளி விழா கொண்டாடியது.

**நா**ன் பல்வேறு தயாரிப்பாளர்களுக்காக, பலவிதமான கதைகள் கொண்ட படங்களை இயக்கி இருக்கிறேன் என்றாலும், சொந்தமாக ஒரு படம் தயாரிக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கு வந்ததில்லை. காரணம், எனக்கு அமைந்த தயாரிப்பாளர்கள் அனைவரும் தங்கமானவர்கள். அவர்கள் எல்லோருமே என் மீது நம்பிக்கை வைத்து, எனக்கு முழுமையான சுதந்திரம் அளித்தார்கள். ஆனாலும், தயாரிப்பாளராகவேண்டும் என்கிற சூழ்நிலை வாக கால

## எஸ்.பி.முத்துராமன்




# பெயர் சூட்டிய ரஜினி!

கட்டத்தில் ஏற்பட்டது. அது ஏன்?

நான் சுமார் 75 படங்களை இயக்கி இருந்தாலும், பாபு, விநாயகம் என்ற இரண்டே இரண்டு ஒளிப்பதிவாளர்கள் தான் என்னுடன் பணியாற்றி இருக்கிறார்கள். 75 படங்களுக்கும் ஒரே எடிட்டர், ஆர்.விட்டல். அதேபோலத்தான் ஆர்ட் டைரக்டர், ஸ்டண்ட் மாஸ்டர், டான்ஸ் மாஸ்டர், காஸ்ட்யூமர் என்று அனைவருமே ஒரு குழுவாக, குடும்பமாகத்தான் பணியாற்றுவோம். அதனால்தான் எங்கள் அனைவரையும் சேர்த்து தமிழ்த் திரை உலகில், 'எஸ்.பி.எம்.யூனிட்' என்று குறிப்பிடுவார்கள். நான் எந்தப் படத்தை இயக்க ஒப்புக்கொண்டாலும், என் யூனிட்டைச் சேர்ந்த அனைவருமே அந்தப் படத்தில் பணியாற்றுவார்கள் என்பது எழுதப்படாத விதி என்றே சொல்லலாம். நான் இயக்கிய படங்கள் வெற்றி பெறும்போது, அது எங்கள் 'யூனிட்டின் வெற்றி' என்று நான் எப்போதும் தவறாமல் குறிப்பிடுவேன்.

ஒரு நாள் ரஜினியிடம், "நீங்கள் எனக்கு ஒரு படம் நடித்துக் கொடுத்தால், அதை நானே தயாரித்து, அதில் கிடைக்கும் லாபத்தை என்னுடைய யூனிட்டிலிருக்கும் அனைவருக்கும் பகிர்ந்து கொடுத்து என் ஏக்கத்தைத் தீர்த்துக் கொள்வேன்'' என்று கூறினேன். ரஜினி என் எண்ணத்தைப் பாராட்டியதுடன், ''கண்டிப்பா உங்க யூனிட்டுக்காக ஒரு படம் பண்றேன் சார்!'' என்று உறுதி அளித்தார். அந்தச் சமயத்தில், ஏவி.எம். நிறுவனம் ரஜினி நடிக்க ஒரு படத்தைத் தயாரிப்பது என்றும், அந்தப் படத்தின் இயக்குநர் ஆர்.வி.உதயகுமார் என்றும் முடிவானபோது சரவணன் சார் ரஜினியிடம், ''நீங்க முத்துராமனுக்காக நடிக்கவிருக்கும் படம் முடிந்த பிறகு,



ஆர்.வி. உதயகுமார் இயக்கத்தில் எங்களுக்கு கால்ஷீட் கொடுங்க. அப்படிச் செய்தால்தான் எங்களுக்கு மனத்திருப்தி ஏற்படும்'' என்று பெருந்தன்மையுடன் கூற, ரஜினியும் அப்படியே செய்தார்.

சொந்தக் கம்பெனிக்கு என்ன பெயர் வைப்பது என்ற கேள்வி எழுந்தபோது, என்னுடைய தாயார் பெயரில் 'விசாலம் புரொடக்ஷன்ஸ்' என்றே வைக்கும்படி ரஜினி ஆலோசனை கூறியதோடு மட்டுமல்லாமல், தம் நண்பர் பிரபாகரன் என்பவர் கன்னடத்தில் எடுத்த ஒரு வெற்றிப் படத்தைத் தமிழில் என்னையே எடுக்கும்படி கூறி, அதற்கான உரிமையை வாங்கிக் கொடுத்தார். அந்தப் படம்தான் 'பாண்டியன்'. படத்தில் வில்லனாக நடித்தவர் பிரபாகரன்தான். என்னுடைய 'பெத்த மனம் பித்து' என்ற படத்தில் சாதாரண ரோலில் அறிமுகமாகி, பின்னர் பெரும் புகழும் பெற்ற ஜெயசுதா, ரஜினிக்கு சகோதரி.

ஒருமுறை ரஜினி ஒரு நிகழ்ச்சியில் பேசும்போது, ''ஒரு நாள் ராத்திரி எட்டு மணிக்கு முத்துராமன் சார், வீட்டுக்குப் போய் கதவைத் தட்டப் போறாரு! அவருடைய மனைவி, கதவைத் திறக்காமலேயே, 'சார் ஏவி.எம்.ஸ்டூடியோவிலே இருக்காரு'ன்னு சொல்லப்போறாங்க'' என்று தமாஷாகக் குறிப்பிட்டார். என் மனைவி, மக்களின் நியாயமான வருத்தத்தைப் போக்க வேண்டும் என்று விரும்பினேன். ஒரு நாள் அவர்களிடம், ''பாண்டியன்' படம் முடிந்ததும், யூனிட் நண்பர்களுக்கு உதவி செய்த திருப்தி ஏற்படும். அதன் பிறகு, வருடத்துக்கு ஒன்று அல்லது இரண்டு படங்கள் மட்டும் ஒப்புக்கொண்டு, உங்களுடன் நிறைய நேரம் செலவிடப் போகிறேன்! இவ்வளவு நாள் நான் செய்த தவறுக்கு உங்களிடம் மன்னிப்பு கேட்டுக்கொள்கிறேன்; படம் முடிந்தவுடன், நாம் அனைவரும் சிங்கப்பூர், மலேசியா என்று ஒரு டூர் போகலாம்'' என்று சொன்னதும், குடும்பத்தினர் அனைவருக்கும் மிகுந்த மகிழ்ச்சி.

'பாண்டியன்' படப்பிடிப்பு வேகமாக நடந்துகொண்டிருந்த சமயத்தில் ஒரு நாள், என் மனைவி நெஞ்சு வலிப்பதாகக் கூறினார். இதய சிகிச்சை நிபுணர், ''ஆபத்து ஏதுமில்லை; இன்னும் மூன்று மாதங்கள் கழித்து மறுபடியும் ஆஞ்சியோகிராம் எடுத்



● மனைவி கமலாவுடன் எஸ்.பி.முத்துராமன்

துப் பார்த்து, அவசியமானால் அறுவை சிகிச்சை செய்யலாம்'' என்று சொல்லி விட்டார். இரவு, சென்னை துறைமுகத்தில் சண்டைக் காட்சியின் படப்பிடிப்பு. புறப்படுவதற்கு முன்பு, வீட்டுக்கு ஃபோன் செய்தேன். ''நான் நன்றாக இருக்கிறேன்; கவலைப்படாமல் ஷூட்டிங்குக்குப் போங்க'' என்று என் மனைவியே பேசினார். நான் துறைமுகத்தை அடைந்தேன். படப்பிடிப்பு ஆரம்பித்து ஒரு மணி நேரம் ஆகி இருக்கும். துறைமுக வளாகத்தி

விருந்த ஓர் அலுவலக ஊழியர் ஓடி வந்தார். உடனே வீட்டுக்கு வரும்படி தகவல் வந்ததாகத் தெரிவித்தார். எடுத்துக் கொண்டிருந்த சண்டைக் காட்சியை எப்படி எடுத்து முடிக்க வேண்டும் என்று ஜ.பி.டோ ரத்தினம் மாஸ்டரிடமும், கேமராமேன் வினாயகத்திடமும் சொல்லிவிட்டு, வீட்டுக்குப் புறப்பட்டேன். வேகவேகமாக வந்தும் வீட்டுக்குள் நுழைந்தபோது, என் மனைவியின் உயிரற்ற உடலைத்தான் என்னால் பார்க்க முடிந்தது. எதிர்பாராத ஹார்ட் அட்டாக்! ஆஸ்பத்திரிக்குச் செல்லும்போதே உயிர் பிரிந்துவிட்டது. அது என் வாழ்க்கையில் ஏற்பட்ட மிகப்பெரிய சோகம்.

வீட்டைப் பற்றிய எந்த நினைவோ, கவலையோ இல்லாமல் சினிமாவுடன் ஒன்றிப்போன எனது வாழ்க்கையில், முழுமையாக எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டு எனக்குப் பக்க பலமாக இருந்தார் எனது மனைவி கமலா. என் குழந்தைகள் என்ன படிக்கிறார்கள் என்று எனக்குத் தெரியாது; அவர்களுக்கு உடம்பு சரியில்லை என்றால் டாக்டரிடம் அழைத்துச் சென்றது கிடையாது; அவர்களுக்குத் திருமண ஏற்பாடுகள் எப்படி நடந்தது என்று எனக்குத் தெரியாது. நாட்டில் அரிசி, பருப்பு, எண்ணெய் விலை என்ன என்று எனக்குத் தெரியாது. என் வாழ்க்கையில் குடும்பப் பொறுப்பு என்ற பாரத்தை எனக்கு அளிக்காமல் முழுமையாகத் தானே சுமந்தார் அவர்.



**என் வாழ்க்கையில் குடும்பப் பொறுப்பு என்ற பாரத்தை எனக்கு அளிக்காமல் முழுமையாகத் தானே சுமந்தார் அவர்**

இந்தச் சமயத்தில் நான் வாசகர்களுக்கு ஓர் ஆலோசனை சொல்ல விரும்புகிறேன். நீங்கள் எவ்வளவுதான் பிஸியான வேலையில் இருந்தாலும், உங்களுடைய மனைவி, குழந்தைகளுக்காக நேரம் ஒதுக்குங்கள். அவர்களோடு மகிழ்ச்சியாக இருந்து, அவர்களை மகிழ்ச்சியடையச் செய்யுங்கள். என் மனைவி இருந்தபோது, ஒரு கணவனாக அவருக்கு உதவ முடியவில்லை; இப்போது நான் ஓய்வாக இருக்கிறேன்; என் மனைவியின் துணை அவசியம் என உணர்கிறேன்; ஆனால், என்கூட என் மனைவி இல்லையே என ஏங்குகிறேன்! இதுபோன்ற சூழ்நிலையை நீங்கள் ஏற்படுத்திக்கொள்ளாதீர்கள் என்பதுதான் எனது வேண்டுகோள்!

ரஜினி ரூட் என்ற தலைப்பில், சூப்பர் ஸ்டார் ரஜினி பற்றிய என் அனுபவத் தொடரை எழுதும் இந்த இனிய வாய்ப்பை அளித்த கல்கிக்கு, என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

*(பயணம் நிறைவடைந்தது)*

எழுத்து வடிவம்:
**எஸ்.சந்திரமௌலி**





மனிதனுடைய பயணங்கள் பல்வேறு நோக்கங்களைக் கொண்டவை. உலகின் அதிசயங்களைக் கண்டு ரசிப்பதற்கும், புராதனச் சின்னங்களைத் தேடிக் காண்பதற்கும், வெறும் பொழுதுபோக்குக்குமாக மனிதன் அங்கும் இங்கும் பயணம் செய்கிறான். ஆனால், புனித நீராடுவது என்கிற நோக்கத்துக்காகவே மேற்கொள்ளும் பயணம் நம் கலாசாரத்தில் மட்டுமே இருக்கிறது என்றே தோன்றுகிறது. கடலையும் நதியையும், ஏரியையும் குளங்களையும், அருவிகளையும் கிணறுகளையும் நாடி நம் மக்கள் போகிறார்கள். ஒரு பயணத்தின் நோக்கம், நீராடுவது மட்டுமே என்று நினைத்துப் பார்க்க ஆச்சர்யமாக இல்லையா?

உலகில் எல்லா நாடுகளிலும் நீர்நிலைகள் இருக்கின்றன. மற்ற நாடுகளில் அவை வெறும் உல்லாச பொழுதுபோக்கும் இடமாக இருக்கையில், பாரத நாட்டில் மட்டும் இந்த நீர் நிலைகளுக்கு ஒரு புனிதத் தன்மை இருப்பதாக தொன்றுதொட்டு வரும் நம்பிக்கையே நம்முடைய பயணத்தின் அடிப்படை.

'இன்னறு நீர் கங்கை ஆறு எங்கள்
ஆறே!
இங்கிதன் மாண்பினுக்கு எதிர் எது
வேறே!'

# தீர்த்தக் கரையினிலே..!



என்று மார்தட்டிப் பாடுகிறானே பாரதி! ஏன்? பாரத பூமியே ஒரு புண்ணிய பூமி. இந்நாட்டில் உள்ள புண்ணிய தீர்த்தங்கள் வெறும் புற அழுக்கைப் போக்கும் நீராக இல்லாமல், நம் மன மாசுகளை அகற்றி, நம் வினைகளையும் கரைக்கும் வீரியம் வாய்ந்தவையாக மக்கள் ஆழமாக நம்புகிறார்கள்.

மூன்று புறமும் கடல் சூழ்ந்த பாரத நாட்டின் நீண்ட கடற்கரையில், பல தீர்த்த ஸ்தானங்கள் அமைந்திருக்கின்றன. இராமேஸ்வரம், கன்யாகுமரி, திருச்செந்தூர், வேதாரண்யம், கோகர்ணம், துவாரகை, சோமநாதம், ஜகன்னாதம் ஆகிய ஸ்தலங்கள் தீர்த்த ஸ்தலங்களே. இங்குள்ள கோயில்களுக்குக்கூட இரண்டாவது இடம்தான். சமுத்ர ஸ்நானம்தான் இங்கு பிரதானம். அமாவாசை மற்றும் பர்வ காலங்களில் கூட்டம் இங்கு அலை மோதுகிறது.

பாரத நாட்டின் நதிகள் அனைத்துமே புண்ணிய நதிகள்தான். இவற்றில் கங்கை, யமுனை, கோதாவரி, சரஸ்வதி, நர்மதை, சிந்து, காவேரி ஆகிய ஏழு நதிகள் மிகச் சிறப்பு வாய்ந்தவையாகக் கருதப்படுகின்றன. அதிலும் கங்கை நதியின் புகழ் சொல்லில் அடங்காது. ''கங்கை கங்கை என்ற வாசகத்தாலே கடுவினை களைந்திடுகிற்கும்'' என்று திருமங்கையாழ்வார் பேசுகிறார். வீட்டில் பக்கெட்டில் தண்ணீர் மொண்டு குளிக்கும்போதுகூட இந்த ஏழு நதிகளை நினைத்துக்கொண்டால் அவற்றில் நீராடிய பலன் கிடைக்குமாம்! இந்த ஏழு நதிகள் உற்பத்தியாகும் இடத்தில் இருந்து கடலில் கலக்கும்வரை உள்ள பூமி அனைத்துமே யாத்திரை ஸ்தலம். கடும்பனி பொழியும் கங்கோத்ரியும் யமுனோத்ரியும் எவ்வளவோ இன்னல்களைக் கடந்து அடையும் இலக்குகளாக இருக்கின்றன. ஏழை எளிய மக்கள், வயோதிகர்கள் தடிக்கம்பை ஊன்றிக் கொண்டாவது வாழ்நாளில் ஒருமுறை இந்த இடங்களுக்குச் சென்று வருகிறார்கள்.

வட இந்தியாவில் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை நடைபெறும் விழா கும்ப மேளா. கங்கை, கோதாவரி, க்ஷிப்ரா ஆகிய நதிகளின் கரையில் அமைந்துள்ள பிரயாகை, ஹரித்வார், நாசிக், உஜ்ஜயினி ஆகிய நகரங்களில் இது மாறிமாறி நடக்கும். உலகிலேயே மிக அதிகமாக ஒரே இடத்தில், ஒரே சமயத்தில் ஜனங்கள் கூடுகிறார்கள் என்றால், அது பிரயாகையில் திரிவேணி சங்கமத்தில் நடைபெறும் கும்ப மேளா விழாவில்தானாம்! எதற்கு? வெறும் ஒரு முழுக்கு போடத்தான்!

புனித நகரமான காசியில் கங்கை நதி வடக்கு முகமாகத் திரும்பி ஓடுகிறது. அதே போல, வடக்குமுகமாக எந்த நதி ஓடினாலும், அந்த இடம் காசிக்கு நிகராகவே மதிக்கப்படுகிறது. ஒரு விஷயம் தெரியுமா? நம்மூர் கூவம் நதிகூட சென்னையில் புதுப்பேட்டை அருகில் உள்ள கோமளீசுவரன் பேட்டையில் வடக்கு முகமாக, உத்தரவாகினியாக, ஓடுகிறது. அதனால், கூவத்தில் நல்ல தண்ணீர் ஓடிக்கொண்டிருந்த அந்த நாட்களில், சென்னையை அடுத்துள்ள ஸ்தலங்களின் உற்சவமூர்த்திகள் தீர்த்த வாரிக்காக இங்கே கூடுவார்களாம்! நம்பவே முடியவில்லை அல்லவா?

'கங்கையிற் புனிதமாய காவிரி' என்று புகழ்பெற்ற காவிரி நதியில், துலாமாதம் என்று வழங்கப்படும் ஐப்பசி மாதத்தில் நீராடுவது மிகவும் விசேஷம். இதற்காகவே தலைக்காவிரி முதல் பூம்புகார் வரை உள்ள காவிரிக் கரையை மக்கள் நாடுகிறார்கள். துலா மாதத்தில் மாயூரம் விழாக்கோலம் பூணுகிறது. ஐப்பசி கடைசி நாளை 'கடை முழுக்கு' என்றும் கார்த்திகை முதல் நாளை 'முடவன் முழுக்கு' என்றும் அழைக்கிறார்கள்!

நதிகளுக்கு உள்ள புனிதத்தன்மை குளங்களுக்கும் உண்டு. ஒவ்வோர் ஊரிலும் ஒரு கோயில், அதைச் சார்ந்த குளம், அதற்கு ஒரு புராணம், அதில் நீராடினால் ஒரு பலன் என்று பரவலான நம்பிக்கை உண்டு. மகாமகக் குளம், திருநள்ளாறு நளதீர்த்தம் போன்றவை இதற்கு சாட்சி. கும்பகோணத்தில் மகா



மகம், தென்னிந்தியாவின் கும்பமேளா!

**ஏ**ரிகள் வகையில் இராஜஸ்தான் மாநிலத்து புஷ்கர் ஏரியும் இமய மலையில் உள்ள மானசரோவர் ஏரியும் குறிப்பிடத்தக்கவை. இரத்தமே உறைந்து போகும் கடுங்குளிர் பிரதேசம் மானசரோவர். உயிரைப் பணயம் வைத்து ஏராளமான செலவில் இந்தப் பயணம் மேற்கொள்வது, ஒரே ஒரு முழுக்கு போடத்தான் என்கிறபோது அந்த நம்பிக்கையைக் காட்டிலும் பலமானது வேறென்ன இருக்க முடியும்!



'கங்கையிற் புனிதமாய காவிரி' என்று புகழ்பெற்ற காவிரி நதியில், துலாமாதம்-என்று வழங்கப்படும் ஐப்பசி மாதத்தில் நீராடுவது மிகவும் விசேஷம்.

**ப**ல இடங்களில் கிணறுகள்கூட புண்ணிய தீர்த்தங்களாக மக்களை ஈர்க்கின்றன. இராமேசுவரத்தில் உள்ள 22 தீர்த்தங்களில் பெரும்பாலானவை கிணறுகளே! திருச்செந்தூரில் நாழிக் கிணறு ஸ்நானம் புனிதமானது. கும்பகோணம் அருகில் திருவிசநல்லூர் என்கிற அழகிய கிராமத்தில், அய்யாவாள் மடத்தில் உள்ள கிணறு ஒன்றில், கார்த்திகை மாதம் அமாவாசை அன்று கங்கை பொங்குவதாக ஐதீகம். அன்று அந்தச் சிறிய கிராமத்தில் பெருமளவில் மக்கள் கூடுகிறார்கள்.

சில இடங்களில் வெந்நீரே பொங்கி வரும் கிணறுகளும் ஊற்றுகளும் உண்டு. இமயமலையில் இத்தகைய வெந்நீர் ஊற்றுகள் பல உண்டு. பத்ரிநாத், கௌரி குண்டம் ஆகிய இடங்களில் உள்ள வெந்நீர் ஊற்றுகள் பிரசித்தமானவை. யமுனை நதி உற்பத்தியாகும் இடமே ஒரு வெந்நீர் ஊற்றுதான். தமிழ்நாட்டில்கூட வேதாரண்யத்துக்கு அருகில் உள்ள திருத்துறைப்பூண்டியில் வெந்நீர் ஊற்று ஒன்று இருப்பது பலருக்குத் தெரியாது!

குற்றாலம், பாபநாசம், பாணதீர்த்தம் ஆகிய இடங்களில் அருவிகள் புண்ணிய தீர்த்தங்களாக விளங்குகின்றன. இப்படி அருவி, நதி, ஏரி, குளம், குட்டை..., கிணறு, சமுத்திரம் என்று எல்லா நீர்நிலைகளும் நம்மூரில் புண்ணிய தீர்த்தங்களாக விளங்குகின்றன.

ஆனால், ஒரு விஷயம் சொல்லாமல் இருக்க முடியவில்லை! மற்ற நாடுகளை விட புண்ணிய தீர்த்தங்களைக் கொண்டாடுவதும் நாம்தான்; வேறு எந்த நாட்டிலும் காணாத வகையில் அவற்றைப் பாழ்படுத்துவதும் நாம்தான்! கங்கை நதியைச் சொம்பிலே அடைத்துவைத்து, வீட்டிலே பூஜை செய்கிறோம்! ஆனால், கங்கை நதியில் ஊர்க்கழிவுகள் அத்தனையும் வந்து கலப்பதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கிறோம்! புண்ணிய தீர்த்தங்களை நாசம் செய்துவிட்டு, அந்தப் பாவத்தை வேறு எங்கு போய்த் தொலைக்கப்போகிறோம்?

# உயிர்ப்பு!

புல்லாங்குழலுக்குள் புகுந்த உனை
அடைத்துவைக்கும் உத்தி தெரியாததால்
அவதிப்படுகிறேன்.
வெளியேறும் ஒவ்வொரு துளைக்கும்
ஒரு கலைத்தன்மையுண்டு.
இலக்கியத்துளையை அடைத்துவிட்டால்
ஓவியமாய் வெளியேறுகிறாய்.
அதையும் அடைத்தால்
வேறொன்றில் வெளியேறி
நாட்டியமாடுகிறாய்.
அத்தனை துளைகளையும்
அடைக்கும் திறன் பெற்றபின்
ஆசுவாசமாய் நிமிர்கிறேன்
உட்புகும் உதட்டின் வழியாகவே
வெளியேறவும் தொடங்கிவிட்டாய்.

– பா.ராஜா



# ஆட்டம்

ஆடுகளத்தில்
நிற்கிறேன் வீரனாய்
ஒவ்வொரு விதமாய்
பிடிக்க முயலும் எதிரணியினர்
அவர்களின் பிடியிலிருந்து தப்பி
எண்ணற்றவர்களின்
சகலவிதத் தாக்குதல்களையும்
மீறி,
நம்பிக்கை என்ற
ஒற்றை வார்த்தையை
'கபடி கபடி'யென மாற்றி
முணுமுணுத்துக் கொண்டே
வெளி வர வேண்டியிருக்கிறது
வாழ்க்கை வியூக
சடுகுடு ஆட்டத்தில்
உன்னைத் தோற்கடிக்க...

– இரா.நாகராஜன்



★ பிரிட்னி ஸ்பியர்ஸ்

ஈராக், ஆப்கானிஸ்தான் நாடுகளில் டேரா போட்டு, வெற்றிவாகை சூடித் திரும்பிய அமெரிக்க வீரர்கள் அனைவருக்குமே ஏகப்பட்ட உளவியல் சிக்கல்களாம். மாதம் ஒன்றுக்கு ஆயிரம் பேராவது தற்கொலை செய்துகொள்ள முயற்சிக்கிறார்கள் என்று பகீர் அறிவிப்பு வெளியாகி இருக்கிறது. ஆப்கானிஸ்தானில் போரிட்டுத் திரும்பிய வர்களில் 144 பேர் தற்கொலை முயற்சியில் வெற்றிபெற்று பத்திரமாக பரலோகம் சென்றுவிட்டார்கள். ஈராக், ஆப்கானிஸ்தான் போய்வந்த மூன்று லட்சம் வீரர்களுக்கு மன ரீதியான பிரச்னைகள் இருப்பது உறுதியாகியிருக்கிறது. அரசியல் நாடகங்களில் அளவுக்கு மீறி அட்டகாசம் செய்த அமெரிக்கா, இனிமேலாவது திருந்தித் தொலையுமா?

அதன் அண்டை நாடான கனடாவில் உள்ள மாண்ட்ரியல் பல்கலைக்கழகம், மற்றொரு ஆராய்ச்சி முடிவை வெளியிட்டிருக்கிறது. 'தற்கொலைக்குக் காரணம், குழந்தைப் பருவத்தில் புறக்கணிக்கப்படுவதாக உணர்வதுதான். அதுதான் கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து தற்கொலை வரைக்



★ ரௌலிங்



## ஜூனியர் பிரபலம்

நம்நாட்டில் பிரபலங்களுக்குப் பிள்ளைகளாகப் பிறப்பதற்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். அமெரிக்காவில் நிலைமை வேறு. அங்கு பிரபலங்களின் பிள்ளைகள் மனம் நொந்து, உளம் வெந்து சிக்கலுக்கு ஆளாகி விடுகிறார்கள். அதிலும் ஹாலிவுட் நட்சத்திரங்களின் குழந்தைகளுடைய கதையைக் கேட்கவே வேண்டாம். சினிமாவுக்குக் கால்ஷீட் கொடுப்பதுபோல அடிக்கடி விவாகரத்து நோட்டீஸையும் கொடுத்துவிடுகிறார்கள். கல்யாணம் கட்... அது சரி பிறந்த குழந்தையை என்ன செய்வது? யார் வளர்ப்பது? பிரச்னைகள் கிளம்ப, சினிமா பத்திரிகைகளுக்குச் சுடச் சுட மேட்டர் ரெடி.

விவாகரத்தான பாப் பாடகி பிரிட்னி ஸ்பியர்ஸ் குழந்தைகளைத் தானே வளர்த்து வந்தார். தலைக்கு மேலே தூக்கிப் போட்டு கேட்ச் பிடிப்பது, லக்கேஜ் மாதிரி காரின் மேல் தூக்கிப் போட்டுக்கொண்டு ஊர் சுற்றுவது என்று அவர் செய்த களேபரத்தில் கதிகலங்கிப்போன முன்னாள் கணவர் கெவின் பெடர்லைன், கோர்ட்டில் கேஸ்போட்டு குழந்தைகளைக் கூட்டிக் கொண்டு போய்விட்டார்.

அமெரிக்காவின் கதை இப்படியென்றால், பிரிட்டனில் மொத்தமும் தலைகீழாக இருக்கிறது. பிரபல ஹாரிபாட்டர் எழுத்தாளர் ரௌலிங், நீதிமன்றத்தில் ஒரு வழக்கைத் தொடுத்திருக்கிறார். அவரது ஐந்து வயது மகன் டேவிட்டின் ஃபோட்டோ சில பத்திரிகைகளில் வெளியாகிவிட்டது. உடனே கொதித்துப்போன ரௌலிங், சம்பந்தப்பட்ட பத்திரிகைகளை கோர்ட்டுக்கும் பிரஸ்ஸுக்குமாக




கும் இட்டுச் செல்கிறது' என்கிறது அந்த ஆராய்ச்சி.

அமெரிக்கா, ஈரான் பிள்ளையை உதைத்து வளர்ப்பது இருக்கட்டும், முதலில் தன்பிள்ளைகளைச் சமர்த்தாக வளர்க்கப் பழகட்டும்!

அலைய வைத்து விட்டார். 'குழந்தைகள் சுதந்திரமாக வாழ வேண்டியவர்கள், அவர்களின் இயல்பான வாழ்வைக் கெடுத்து விடக் கூடாது' என்று ரௌலிங் செய்த வாதத்துக்கு நீதிமன்றம் தலையாட்டி விட்டது.

பப்பராஸிகளைக் கண்டு பயந்து பாப் பாடகிகளும், ஹாலிவுட் நடிகைகளும் அலறி ஓடலாம். பேனா பிடிப்பவர்களிடம் அவர்களின் பாச்சா பலிக்குமா?

## கடலின் நடுவே கார் பயணம்!

சீனா என்றவுடன் பெருஞ்சுவர்தான் நினைவுக்கு வரும். அடுத்து, கடலுக்குள் 36 கிலோ மீட்டர் தூரத்துக்கு பிரம்மாண்டமாய் ஒரு பாலம் கட்டியிருக்கிறார்கள். உலகின் நீளமான கடல்பாலம் என்ற பெருமையும் இதற்குக் கிடைத்திருக்கிறது. காரணம்! ஒன்றும் விசேஷமில்லை; டிராஃபிக் பிரச்னையைச் சமாளிக்கத்தான்! பிரச்னை தீர்ந்ததா என்றால், ஏற்கெனவே இருந்த டிராஃபிக்கே பரவாயில்லை! கடலுக்கு நடுவே காரோட்டும் சந்தோஷத்தை அனுபவிக்க எல்லோருமே சைக்கிள் வேகத்தில் நகர ஆரம்பித்திருக்கிறார்கள். பாலம் முழுக்க கார்கள். சிலபேர் காரை ஓரங்கட்டிவிட்டு, வாக்கிங் போக ஆரம்பித்திருக்கிறார்கள். பொறுமையை இழந்த காவல்துறை முந்நூறு பேரை ஒரே நேரத்தில் பிடித்து 'கலெக்ஷன்' கட்டிவிட்டதாம்!

அப்படியே சென்னையிலும் மெரினாவிலிருந்து பெசன்ட் நகர் பீச் வரைக்கும் ஒரு பாலம்கட்டினால் எப்படி இருக்கும்?

- ஸாந்த்









# காலத்தின் கல்வெட்டு

**இலக்கிய முன்னோடிகள்- திருப்பூர் கிருஷ்ணன், திருப்பூர் குமரன் பதிப்பகம், 57-பி, பத்மாவதி நகர், காமராஜ் சாலை, விருகம்பாக்கம், சென்னை - 92. விலை ரூ.80**

உயர்தர இலக்கியவாதிகளான சி.சு.செல்லப்பா, தருமு சிவராமு, கி.வா.ஜ., தொ.மு.சி., தி.ஜானகிராமன், அகிலன் - என 31 எழுத்தாளர்களோடு ஆசிரியருக்கு ஏற்பட்ட அனுபவங்கள். எளிமையும் இனிமையுமாய்க் கலந்து செல்லும் இந்நூல், காலத்தின் கல்வெட்டு!

**ஜெயகாந்தன் கவிதைகள் - ஜெயகாந்தன், தொடுவானம், 190/அ5 - ஸ்ரீசாய் நகர், தொழிற்பேட்டை, கோயமுத்தூர் - 641 021. விலை ரூ.100**

'என் கவிதைகள், குழந்தைகள் விளையாடும் ஏழாங்காய்க் கற்கள்' என்ற ஜெயகாந்தன் முன்னுரையோடு வந்துள்ள இந்நூலில், அவரின் பாடல்கள் மற்றும் மரபு உரைகள் அழகிய வடிவில் அமைந்துள்ளன. ஐம்பது சதவிகிதம் படங்கள் நிரம்பிய இத்தொகுப்பில், நமது மண் சார்ந்த ஓவியங்களைப் பயன்படுத்தி இருந்தால் சிறப்பு மேலும் கூடியிருக்கும்.



**அரசியல் - நல்லகண்ணு அ.மார்க்ஸ், தென்திசை, 19, சீனிவாச ரெட்டி தெரு, தி.நகர், சென்னை - 17. விலை ரூ.50**

தோழர் நல்லகண்ணுவை விமர்சகர் அ.மார்க்ஸ் சந்தித்து உரையாடிய விவாதங்களின் தொகுப்பு. தமிழ் தேசியம் ஆபத்தானதா? கட்சி தேவையா? அணு ஆற்றல் இல்லாமல் இருக்க முடியாதா? போன்ற கேள்விகளுக்கான விவாத மேடையாகயிருக்கும் இந்நூல், சுவாரசியமான அவசியம்.

**தேவாரத் திருவுலா! பாகம் 3 - டாக்டர் சுதா சேஷய்யன், விகடன் பிரசுரம், 757, அண்ணாசாலை, சென்னை - 2. விலை ரூ.110**

எழுத்தின் மூலம் ஈசனின் திருத்தலங்களுக்கு யாத்திரையாக அழைத்துச் சென்று, இடையிடையே தேவாரப் பாடல்களை மனத்தில் பூசி, மெய் மறக்கச் செய்யும் நூல். வண்ணப் படங்களுடன் எண்ணத்தைச் சிறக்க வைக்கிறது.

**- அமிர்தா**

# சிலந்தி

சாஃப்ட்வேர் இளைஞர்களிடையே சரிந்து வரும் வாழ்வியல் மதிப்பீடுகள் குறித்துக் கவலையை வெளிப்படுத்தியிருக்கும் படம். கொஞ்சம் இளமை... கூடுதலாக 'த்ரில்' கலந்து கொடுத்திருக்கும் இயக்குநர் ஆதிக்கு முதல் படம்.

★ ஹனிமூனுக்கு வரும் ஜோடியில், பெண்ணை மட்டும் ஒரு மாய உருவம் துரத்த, நமக்குள் ஒரு பரபரப்பு தொற்றிக் கொள்கிறது.

★ மாய உருவத்திடம் சிக்கிக் கொண்டு தவிக்கையில் மோனிகாவின் நடிப்பு பிரமாதம். நாம் தான் அகப்பட்டுக் கொண்டோமோ என்ற உணர்வை ஏற்படுத்தி விடுகிறார். ஆனால், இந்தளவுக்குக் கிளாமர் தேவையா?



★ ராகிங் காட்சி, இன்றைய இளைஞர்கள் மத்தியில் நிலவிவரும் ஆரோக்கியமற்ற சூழலைப் படம்பிடிக்கிறது. அபரிமிதமான பொருளாதார சுதந்திரம்தான் இதற்குக் காரணம் என்று இயக்குநர் சொல்வது சிந்தனைக்குரிய சிக்கல்.

★ கதாநாயகன் முன்னா புதுமுகம். கதாபாத்திரத்துக்கு ஏற்ற கச்சிதம். மனைவியை மாய உருவத்திடமிருந்து மீட்கப் போராடுகையில் சபாஷ் பெறுகிறார்.

★ மோனிகாவின் தோழிகளாக நடித்திருக்கும் பெண்கள் இன்றைய சாஃப்ட்வேர் இளைஞர்களின் ஜெராக்ஸ்.

★ வாட்ச்மேன், போட் டிரைவர் என, ஒவ்வொருவரும் தம் மேனரிசத்தால் மிரட்டுகின்றனர்.

★ பாடல்களைவிட பின்னணி இசையில் ஸ்கோர் செய்கிறார் இசையமைப்பாளர் கார்த்திக்.

★ நேர்த்தியான, கண்களை உறுத்தாத ஒளிப்பதிவு. பாடல்கள் படமாக்கப்பட்ட விதம் கண்களுக்குள் குற்றாலம் உணரச் செய்கிறது. பௌசியா ஃபாத்திமாவின் கேமராவுக்குப் பாராட்டுகள்.

★ இயக்குநருக்கு முதல் படம் என்பதால் ஆங்காங்கே சிற்சில குறைகள் தெரிகின்றன. படம் முடிந்து வரும் டைட்டிலில் சொல்லும் செய்திகளுக்காக டைரக்டரைப் பாராட்டலாம்.

– சாந்தி

என் வண்டியில் ஏறிய மனிதர், ''அப்பா! பயங்கரம்!'' என்றார். அவரை ஏறிட்டுப் பார்த்தேன். படித்த நாகரிக மனிதராகக் காணப்பட்டார். வயது நாற்பது இருக்கும். ஐரோப்பிய உடை தரித்திருந்தார். அவருடைய கண்கள் யிலின் அபாய அறிவிப்பு விளக் கைப் போல சிவப்பாக ஜொலித் ன.

சட்டைப் பையிலிருந்த ஒரு புட்டியை எடுத்து அதி லிருந்த பானத்தைக் கடகட வென்று வாயில் விட்டுக் கொண்டு குடித்தார்.

''ஐயோ! என்ன வெப்பம்! மரண தாகம் எடுத்துவிட் டது!'' என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார்.

பிறகு என்னை நோக்கி, ''அந்த அற்புதத்தைப் பார்த் தீரா?'' என்றார்.

''எந்த அற்புதத்தை?'' என்று கேட்டேன்.

''அந்த ஒற்றை ரோஜாப்

# நெடுங்கதை



பூவைத்தான்!'' என்றார்.

''அதில் அற்புதம் என்ன?'' என்று சிறிது கோபமான குரலில் கேட்டேன்.

''அற்புதம் என்னவா? ஆம். உமக்குத் தெரியாது. தெரிகிறதற்கு நியாயம் இல்லை. அந்த ஒற்றை ரோஜாப்பூவிலே தான் என் உயிர் இருக்கிறது'' என்று சொல்லிவிட்டு ஒரு விகாரமான புன்னகை புரிந்தார்.

அவர் ஏதோ அனுசிதமான பரிகாசம் செய்யப்போகிறார் என்று எண்ணினேன். ஆகையால் ஆத்திரம் பொங்கிக்கொண்டு வந்தது.

''இன்னமும் எனக்குப் புரியவில்லை!'' என்று கடுமையான குரலில் கூறினேன்.

''ஆமாம்; அந்த ஒற்றை ரோஜாப் பூவில் தான் என் உயிர் இருக்கிறது. அதனாலே

லேயே மூன்று நாட்களாகியும் அது வாடாமலிருக்கிறது!'' என்றார்.

நான் சிறு பிள்ளையாக இருந்தபோது, ஒரு ஆரம்பப் பள்ளிக்கூடத்தில் படித்துக் கொண்டிருந்தபோது, ஒரு தடவை எங் கேயோ பராக்குப் பார்த்துக் கொண்டிருந் தேன். வாத்தியார் பிரம்பினால் சுளீர் என்று முதுகில் அடித்தார். அச்சமயம் என் தலையிலிருந்து ஆயிரம் மின்னல்கள் கிளம்பி வெளியில் சென்றது போலத் தோன்றியது. அத்தகைய உணர்ச்சி இப் போதும் உண்டாயிற்று. அந்த ஒற்றை ரோஜாப்பூ சிறிதும் வாடாமலிருப்பதன் அதிசயத்தை அதுவரையில் நான் எண்ணிப்

தங்கத்தினாலும் வைரத்தினாலும் மற்றும் விலை உயர்ந்த ரத்தினங்களினாலும் ஆப ரணங்களைச் செய்து சில ஸ்திரீ கள் போட்டுக்கொள் கிறார்கள். அதனால் அவர்களுடைய அழகு அதிகமாகி விடு கிறதா? அவலட் சணந்தான் அதிக மாகிறது!

இம்மாதிரி சிந் தனையில் நான் ஆழ்ந்திருந்தபோது அந்த மனிதர் தொண்டையைக் கனைத்துக்கொண்டு, ''இது இரண்டாம்



# 2 ஒற்றை ரோஜா

## அமரர் கல்கி

பார்க்கவில்லை. அது நிஜ ரோஜாப் பூவா யிருக்க முடியாது; நிஜ ரோஜாவைப் போல் அபூர்வ வேலைப்பாட்டுடன் செய்த செயற்கை ரோஜாப் பூவாகத்தான் இருக்க வேண்டும். அதனால் என்ன? நிஜ ரோஜாப் பூவுக்குப் பதில் செயற்கை ரோஜாப் பூவை வைத்துக்கொள்வதில் என்ன தவறு? உடனே, அவளுடைய தந்த வர்ணக் கழுத்தில் அணிந்திருந்த இரட்டை வட முத்துமாலை என் கவனத்துக்கு வந்தது. அதுவும் செயற்கை முத்துமாலைதான். அதனால் என்ன? அவளுடைய கையில் அணிந்திருந்த இரண்டு அழகிய சங்கு வளையல்களும் என் நினைவுக்கு வந்தன.

வகுப்பு வண்டியா?'' என்று கேட்டார்.

''ஆமாம்!'' என்றேன்.

''அதுதானே பார்த்தேன்? என்னிடம் முதல் வகுப்பு டிக்கட் இருக்கிறது. திண் டுக்கல்லில் முதல் வகுப்பு வண்டிக்குப் போய்விடுகிறேன்'' என்றார்.

உடனே எனக்கு ஒரு மகிழ்ச்சி உண்டா யிற்று! அதை அவரும் தெரிந்துகொண்டார். ''அதற்குள் உமக்கு ஒரு எச்சரிக்கை செய்து விட விரும்புகிறேன்!'' என்றார்.

''என்ன எச்சரிக்கை?'' என்று கேட் டேன்.

''அந்த ஒற்றை ரோஜாப்பூக்காரியைப்

பற்றித்தான் அவளுடைய ஊர், பெயர் உமக்குத் தெரியுமா?'' என்றார்.

''தெரியாது; தெரிந்துகொள்ள விரும்பவும் இல்லை!'' என்றேன்.

ஆனாலும் அந்த மனிதர் விடவில்லை. ''அவள் பெயர் மனோகரி; அவளுடைய ஊர் கொழும்பு'' என்றார்.

மனோகரி என்ற பெயரைக் கேட்டதும் என் உள்ளம் பூரித்தது. என்ன அழகான பெயர்! 'மனோகரி' 'மனோகரி' என்று இரண்டு, மூன்று தடவை வாய்க்குள் சொல்லிப் பார்த்துக்கொண்டேன்.

கொழும்பு நகரைப் பற்றி நான் எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் பார்த்ததில்லை. நவநாகரிகத்தில் சிறந்த அந்த நகரத்திலேதான் இத்தகைய பெண் பிறந்து வளர்ந்திருக்கக்கூடும். அதில் ஆச்சரியம் என்ன?

அந்த மனிதருடைய பேச்சைக் கேட்பதில் எனக்கு ஏற்பட்டிருந்த அருவருப்பு மாறிவிட்டது. திண்டுக்கல் ஸ்டேஷன் வருவதற்குள் அவரிடமிருந்து அந்தப் பெண்ணைப் பற்றிக் கூடிய வரையில் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசையும் உண்டாகிவிட்டது.

அடடா! அந்த ஆசையின் விளைவு என்ன கோர பயங்கரம்! முதலில் நினைத்தபடியே அவருடன் நான் பேச்சுக்கொடுக்காமல் இருந்திருக்கக் கூடாதா?

''உங்களுக்கும் கொழும்புதான் போலிருக்கிறது. அந்தப் பெண், கொழும்பில் உங்கள் அக்கம் பக்கத்து வீட்டைச் சேர்ந்தவரோ?'' என்று கேட்டுவிட்டேன்.

உடனே அவர் தம்முடைய கதையை ஆரம்பித்தார். பயங்கரமான விஷயங்களைப் படிக்க விருப்பமில்லாத வாசகர்கள், இந்தப் பகுதியை இங்கேயே விட்டுவிட்டு, அடுத்த பகுதியிலிருந்து படிக்கத் தொடங்குவது நலம்.

அவர் கூறியதாவது :

''அவளும் நானும் அக்கம் பக்கத்தில் வசிப்பவர்கள் அல்ல. கொழும்பு நகரம் மிகப் பெரியது. அதில் நான் ஒரு பக்கத்திலும் அவள் ஒரு பக்கத்திலும் இருக்கிறோம். கண்டியிலிருந்து கொழும்புக்கு வரும் ரயிலில்தான் அவளை நான் முதலில் சந்தித்தேன். அந்தப் பாதையில் வரும்போது இரு பக்கங்களிலும் உள்ள அழகிய காட்சிகளைப் பற்றிப் பேசாவிட்டால் நெஞ்சு வெடித்துவிடும்! நீர் இலங்கைக்கு வந்ததில்லை. வந்திருந்தால், கண்டி-கொழும்பு பாதையில் பிரயாணம் செய்திருந்தால் உமக்கு நான் சொல்வது விளங்கும். அவ்வளவு அழகான இயற்கைக் காட்சிகள் உலகில் வேறு எங்கும் காண முடியாது.

நாங்கள் ஏறியிருந்த வண்டியில் எங்களைத் தவிர வேறு யாரும் இல்லை. ஆகையால் அவளுடனே நான் பேச வேண்டியதாயிற்று. அவளும் உற்சாகமாகவே பேசிக்கொண்டு வந்தாள். கொழும்பு ஸ்டேஷன் சமீபித்ததும் ஒருவருடைய விலாசத்தை ஒருவர் கேட்டுத் தெரிந்துகொண்டோம். அவளுடைய வாசம் வெள்ளவத்தை என்று தெரிந்து



''சென்சார் போர்டு அதிகாரியை கல்யாணம் பண்ணினது தப்பாயிடுச்சு.''

''ஏன்?''

''பெட் ரூமைப் பார்த்தாலே வெறுப்பாயிடறார்!''

– உதய்

"சபையில் மன்னர் ஏன் குலுங்கிக் குலுங்கி அழறாரு?"

"விகடகவியின் வேலையாகத்தான் இருக்க வேண்டும்!"

– பி.ஜி.பி. இசக்கி



கொண்டேன். மதராஸுக்கு மாம்பலம் எப்படியோ, அப்படி கொழும்புக்கு வெள்ளவத்தை. தன்னுடைய வீட்டுக்கு ஒரு நாள் வரும்படி கேட்டுக்கொண்டாள். 'அடுத்த ஞாயிற்றுக்கிழமை வருகிறேன்' என்று ஒப்புக்கொண்டேன். அந்தப்படியே மறு ஞாயிற்றுக்கிழமை வெள்ளவத்தை சென்று அவளுடைய வீட்டைத் தேடிக் கண்டு பிடித்தேன்; நான் போனபோது அவள் வீட்டில் இல்லை. வேலைக்காரன் ஒருவன் இருந்தான். 'இப்போது வந்துவிடுவார்கள்; உட்காருங்கள்!' என்றான். வீட்டுத் தாழ்வாரத்தில் போட்டிருந்த சாய்மான நாற்காலி ஒன்றில் அமர்ந்தேன்.

வீட்டு வாசலில் இருந்த சிறிய தோட்டத்தில் புஷ்பச் செடிகளும் அழகான குரோட்டன்ஸ் செடிகளும் கொழுகொழுவென்று வளர்ந்திருந்தன. அவற்றில் ஒரே ஒரு ரோஜாச் செடியும் இருந்தது. அந்தச் செடியில் ஒற்றை ரோஜா ஒன்று மலர்ந்து 'நான்தான் புஷ்பங்களின் ராஜா' என்று பறையறைந்து கொண்டிருந்தது.

நேரமாக ஆக என் மனத்தில் ஒரு பதைபதைப்பு ஏற்பட்டது. 'இது யார் வீடோ என்னமோ? அந்தப் பெண்ணுக்குச் சொந்தக்காரர்கள் எப்படிப்பட்டவர்களோ? அவள் அழைத்தாள் என்று நாம் வந்து விட்டோமே? இது சரியான காரியமா?' என்ற எண்ணங்கள் தோன்றி என் உள்ளத்தைக் குழப்பின.

சிறிது நேரத்துக்கெல்லாம் மனோகரி வந்தாள். என்னைப் பார்த்ததும் அவள், 'வாருங்கள்! வாருங்கள்! நீங்கள் வருவதாகச் சொன்னதை மறந்துவிட்டேன்' என்றாள். பிறகு அவளுடன் வந்தவருக்கு என்னை அறிமுகப்படுத்தி வைத்தாள். பிறகு என்னை உள்ளே அழைத்துப்போய் விருந்தினரை வரவேற்பதற்குரிய விசாலமான முன்னறையில் உட்கார வைத்தாள். சிறிது நேரத்துக்கெல்லாம் அவளும் வந்து எதிரில் உட்கார்ந்து கொண்டாள். வேலைக்காரன் டீ கொண்டு வந்து கொடுத்தான். நான் டீ சாப்பிட்டுக்கொண்டேயிருக்கையில் என் பின்னால் வந்து யாரோ நிற்பதை உணர்ந்தேன். உடனே என் மண்டையில் 'படீர்' என்ற ஒரு அடி விழுந்தது. அவ்வளவுதான்; செத்து விழுந்துவிட்டேன்... ஆமாம் ஐயா, ஆமாம்! செத்துத்தான் விழுந்தேன். உமக்கு நம்பிக்கை படாதுதான். கதையைப் பூராவும் கேட்டுவிடும். செத்துவிழுந்த என் பேரில் ஒரு கம்பளத்தைப் போட்டு மூடினார்கள். நான் செத்துப் போய்விட்டேன் என்று எனக்கு நன்றாகத் தெரிந்தது. ஆனால் என் உயிர் மட்டும் அங்கேயே சுற்றி வந்து கொண்டிருந்தது. ஆனால், என் உடம்பை இவர்கள் என்ன செய்யப் போகிறார்கள் என்று அறிந்துகொள்ள விரும்பினேன். அதனால்தான் அங்கேயே வட்டமிட்டுக் கொண்டிருந்தேன். அன்று நள்ளிரவில் இந்தப் பெண்ணும் அவளோடு வந்த ஆடவனும் என் உடலைத் தூக்கிக் கொண்டு போனார்கள். தோட்டத்தில் ஒரு பெரிய குழி வெட்டப்பட்டிருந்தது. அதில்

என் உடம்பைப் போட்டுப் புதைத்தார்கள். எல்லாம் முடிந்ததும் மனோகரி ஒரு பெருமூச்சுவிட்டு, 'ஐயோ பாவம்!' என்றாள். அவள் கண்களில் கண்ணீர்த் துளிகளும் வந்தன. எனக்கு என்னவோ பரமதிருப்தி ஆகிவிட்டது. பிறகு அவர்கள் கொஞ்ச தூரத்தில் பூச்சட்டியில் இருந்த ஒரு ரோஜாச் செடியைப் பெயர்த்து எடுத்து, என்னைப் புதைத்த இடத்தின்மேல் அதை நட்டுவிட்டார்கள். மனோகரி ஒரு சிறிய பாத்திரத்தில் தண்ணீர் கொண்டு வந்து ஊற்றினாள். அந்தத் தண்ணீரோடு அவளுடைய கண்ணீர்த் துளிகளும் கலந்ததாக எனக்குத் தோன்றியது.

என் உயிருக்கு இன்னமும் அவ்விடத்தை விட்டுப் போக மனமில்லை. அந்தக் குழியையும் அதன் மேலிருந்த செடியையும் சுற்றி வட்டமிட்டுக்கொண்டிருந்தது. கொஞ்ச நாளைக்கெல்லாம் அந்த ரோஜாச்செடியில் ஒரு மொட்டுவிட்டது. அந்த மொட்டுக்குள் போய் என் உயிர் புகுந்துகொண்டது. மொட்டு மலர்ந்து பூவாயிற்று. நானும் அதிலேயே காத்திருந்தேன். மனோகரி அந்த ரோஜாவைப் பறித்துத் தன் கூந்தலில் சூடிக்கொள்வாள் என்ற ஆசையோடு காத்திருந்தேன். அம்மம்மா! அப்படிக் காத்திருக்கும்போது ஒவ்வொரு விநாடியும் ஒரு யுகமாக இருந்தது. கடைசியில் அவள் வந்து தன் தங்கக் கரத்தினால் அந்த ரோஜாவைப் பறித்துத் தன் தலையிலே சூடிக்கொண்டாள். அப்புறம்தான் என் ஆத்மா சாந்தி அடைந்தது.

தம்பி! உன்னைப் பார்த்தால் நல்ல அறிவாளியாகத் தோன்றுகிறது. ஆகையால், நீயே ஒருவேளை ஊகித்துக்கொண்டிருப்பாய். அவர்கள் வீட்டுத் தாழ் வாரத்தில் சாய்மான நாற்காலியில் சாய்ந்து கொண்டு சிறிது நேரம் தூங்கிவிட்டேன். அப்போது நான் கண்ட கனவையே இத்தனை நேரம் சொன்னேன். மனோகரி திரும்பி வந்த பிறகு அப்படியெல்லாம் என்னை ஒன்றும் செய்துவிடவில்லை. மரியாதையாகப் பேசித் திருப்பி அனுப்பினாள். அதன் பிறகு அடிக்கடி நாங்கள் சந்திப்பதுண்டு. இருந்தபோதிலும், அவளுடைய கூந்தலில் ஒற்றை ரோஜாப் பூவைக் கண்டால் மாத்திரம் எனக்கு ஒரு திகில் உண்டாகிவிடுகிறது. அன்று கண்ட கனவு நினைவுக்கு வந்துவிடுகிறது...''

அம்மனிதர் பாதிக் கதை சொல்லிக்கொண்டு வந்தபோது அவர் பைத்தியக்கார ஆஸ்பத்திரியிலிருந்து தப்பி வந்தவராயிருக்க வேண்டுமென்று எண்ணிக்கொண்டேன். அவரிடம் இவ் வண்டியில் தனியாக மாட்டிக்கொண்டோமே என்று கொஞ்சம் கவலையாகவும் இருந்தது. அவ்வளவும் கனவு என்று அவர் கதையை முடித்தபோது என்னையறியாமலே பெருமூச்சு விட்டேன். இவர் ஒரு விளையாட்டு மனிதர் என்று முடிவு செய்துகொண்டேன். ஆயினும், இப்படியெல்லாம் பயங்கரமாக ஏன் கற்பனை செய்ய வேண்டும்? அவருடைய மூளையில் ஏதேனும் கொஞ்சம் கோளாறு இருந்தாலும் இருக்கலாம்.

**''தலைவர் ஏன் வானிலை ஆராய்ச்சி மைய அதிகாரி மீது கோபமாக இருக்கிறார்?''**

**''புயலுக்குப் பேர் வைக்க, தலைவரைக் கூப்பிடவில்லை என்றுதான் கோபப்படறார்.''**

**- லலிதா செல்லப்பா**



**மனோகரி என்ற பெயரைக் கேட்டதும் என் உள்ளம் பூரித்தது. என்ன அழகான பெயர்! மனோகரி... என்று இரண்டு, மூன்று தடவை சொல்லிப் பார்த்துக் கொண்டேன்.**



ரயில் வண்டி தண்டவாளம் மாறும் கடபுட சத்தம் கேட்கலாயிற்று. திண்டுக்கல் ஸ்டேஷனுக்குள் வண்டி போய்க் கொண்டிருக்கிறது என்று தெரிந்து கொண்டேன்.

இதோ பாரும்! நான் திண்டுக்கல்லில் இறங்கி முதல் வகுப்பு வண்டி ஏதாவது காலியாயிருக்கிறதா என்று பார்த்து வருகிறேன். அதுவரையில் இந்தப் பெட்டி இங்கேயே இருக்கட்டும். ஒரு விஷயம்; அந்தப் பெண் உம்முடன் பேச மறுபடியும் வருவாள் என்று தோன்றுகிறது. அவள் கூந்தலில் உள்ள ஒற்றை ரோஜாப்பூவை எப்படியாவது நீர் எடுத்து வைத்திருந்து என்னிடம் ஒப்புவித்தால், ஆயிரம் ரூபாய் உமக்குக் கொடுக்கிறேன். இல்லை; ஆயிரம் ரொம்பக் குறைவு. இரண்டாயிரம் ரூபாய் தருகிறேன்; சரிதானே! ஆனால் அவளுக்கு மட் தெரியக்கூடாது; தெரிந்தால் உயிருக்கே ஆபத்து! தெரிந்ததா?''

இந்த மனிதருக்கு மூளைக் கோளாறுதான்! சந்தேகமில்லை. பெட்டியையும் எடுத்துக்கொண்டு தொலைந்து போகக் கூடாதோ! மறுபடியும் இவர் இங்கேயே வருவதாயிருந்தால் நாம் இறங்கி வேறு வண்டி பார்த்துக்கொள்ள வேண்டியதுதான் என்று தீர்மானித்தேன்.

(தொடரும்)

# இரண்டுக்கு 'நோ'... ஒன்னுதான் 'ஓகே!'

4.5.2008 தேதியிட்ட கல்கி இதழில் 'லேட் மேரேஜ்... லேடீஸ் ப்ராப்ளம்' என்ற தலைப்பில் மருத்துவக் கட்டுரை வெளியாகி இருந்தது. அதில் தாமத மாகத் திருமணம் செய்து கொள்வதால் பெண்களுக்கும், அவர்களுக்குப் பிறக் கும் குழந்தைகளுக்கும் ஏற்படும் இடர்ப் பாடு குறித்துப் பேசப்பட்டிருந்தது. கட்டுரை பற்றி பெண்களிடம் கேட்ட போது...

**உமாதேவி பலராமன் (கல்லூரி மாணவி) :**

பொறியியல், மருத்துவம் படித்து பணிகளில் இருக்கின்ற பெண்களில் கணிச மானவர்கள் தங்களின் வாழ்க்கைப் பய ணத்தை 28 வயதுக்கு மேல்தான் ஆரம்பிக் கின்றனர்.



* உமாதேவி பலராமன்

எல்லாவற்றிலும் சிறப்பாக, பெண்கள் இளம் வயதில் நோய் எதிர்ப்பு சக்தி அதிகமாக உள்ள வயதில், அதாவது 25 வயதுக்குள் திருமணம் செய்துகொண்டு கருத்தரிப்பது நல்லது. குறைந்தபட்சம் இரு குழந்தைகள் இருந்தால்தான் அது குடும்பமாக இருக்கும். இல்லையேல் உறவுகளற்றுப் போகும் அடுத்த தலை முறை.

**ப்ரியா (தனியார் வங்கி ஊழியர்):**

ரெண்டுபேரும் வேலைக்குச் செல்வ தால் நேரத்தைத் திட்டமிட்டுச் செலவிட வேண்டியிருக்கு. ஒரு குழந்தை இருக்கற தால, அவமேல நிறைய கேர் எடுத்துக்க முடியுது. அதே நேரத்துல, நாங்க என்ன தான் அவளுக்காக டைம் ஸ்பெண்ட் பண்ணினாலும், கூடப்பிறந்தவங்க இல்லேங்கிறதால எந்த விஷயத்தையும் அவளால் ஷேர் பண்ண முடியல. அந்தத் தனிமை உணர்வு அவளுக்கு



* ப்ரியா

வந்துடக் கூடாதுன்னுதான். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் என் கணவரோட தம்பி வீட்டுக்கு அவனை அழைத்துச் செல்வோம். அங்குள்ள பிள்ளைங்ககூட அவ சந்தோஷமா விளையாடுவா.

***உஷா (ஆயுர்வேத மருந்து விநியோகஸ்தர்):***

குழந்தையை வளர்க்கறது ஒரு சவாலான விஷயம். ஒரு குழந்தையா இருந்தா, அந்தச் சவால சமாளிக்கலாம்.

ஒரே பையனா இருக்கிறதால அவனோட 'எக்ஸ்ட்ரா கரிகுலர் ஆக்டிவிட்டி'யை நல்லா டெவலப் பண்ணி வைச்சிருக்கேன்.

ரெண்டு குழந்தை வைச்சிருக்கறவங்க என் பையனோட திறமையைப் பார்த்து, 'உங்கள மாதிரி எங்க குழந்தைகள கவனிக்க முடியல'ன்னு சொல்றாங்க.

இப்ப சொல்லுங்க, ஒரு குழந்தை போதும்தானே!

***அபர்ணா (அழகுக் கலை நிபுணர்):***

நம்மோட ஆசைகளை எல்லாம் குழந்தைகள் மேல திணிக்கிற நிலைமை நிறைய இருக்கு. அப்படி இல்லாம, ஒரே ஒரு குழந்தையைப் பெத்தெடுத்து, அந்தக் குழந்தையோட திறமைக்கும், கருத்துக்கும் முக்கியத்துவம் கொடுத்து வளர்த்தா நல்லா இருக்கும்ல.

அது மட்டுமில்லீங்க... இந்தப் போட்டி உலகத்துல குழந்தைக்கு 'குவாலிட்டி எஜுகேஷன்' கொடுக்க வேண்டியிருக்கு. ஒரு குழந்தை இருந்தா, நிச்சயமா அதைக் கொடுக்க முடியும்.

***மல்லிகா கோவிந்தராஜன் (இல்லத்தரசி):***

● உஷா



உறவுமுறைக்கு ஓர் அர்த்தம் இருக்கணும்னா இரண்டாவது குழந்தை அவசியம் தேவைன்னுதான் சொல்வேன். ஆனா லேட் மேரேஜ், இப்ப உள்ள நெருக்கடியான சூழலை யோசிக்கும் போது, இரண்டாவது குழந்தை பற்றித் தீவிரமா யோசிக்கணும்!



● அபர்ணா

***உமா மகேஸ்வரி:***

பிறந்து மூணு வயசு வரைக்கும், தாயோட முழு அரவணைப்பில் குழந்தை இருக்கணும். அப்பதான் அந்தக் குழந்தையை நல்லபிள்ளையா வளர்க்க முடியும்.

வேலைக்குப் போகிற பெண்களுக்கு இது சாத்தியமா?



● மல்லிகா

நிறைய கேர் எடுத்துக்கிட்டு, குழந்தையை நல்லபடி வளர்த்து வரலாம். குழந்தையை வளர்க்கற முறையில்தான் விஷயமே இருக்கு... சமுதாயத்துலயும் படிப்புலயும், பண்புலயும் தலை சிறந்த இடத்துக்குக் கொண்டு வரணும்னா, அந்த ஒரு குழந்தைக்கு அதிக அளவு கேர் செலுத்தணும். இரண்டாவது குழந்தை வந்தா எப்படி முடியும்?

● உமாமகேஸ்வரி



***மீனாட்சி (பள்ளி ஆசிரியை):***

கூட்டுக் குடும்பமா இல்லாத பட்சத்தில், ஒரு குழந்தையோட நிறுத்திக்கறது நல்லது. விலைவாசி பிரச்னையில் இருந்து, எந்தப் பிரச்னை வந்தாலும், அதிகமா பாதிக்கப்படறது நடுத்தரவர்க்கம்தான்.

● மீனாட்சி



சராசரி வாழ்க்கையை நகர்த்தறதுக்கே மூச்சுத் திணற வேண்டிய கால கட்டத்தில், எப்படி சார் ரெண்டாவது குழந்தை?

**– எம்.திரவிய முருகன்**



# நாளைய நட்சத்திரங்கள்!

▪ ச.ந.கண்ணன் ▪

ஐ.பி.எல்.தொடங்கப்பட்டதன் நோக்கமே இந்திய இளம் வீரர்களுக்கு உலகக் கிரிக்கெட்டை அறிமுகம் செய்து வைத்து, கூடவே ஐ.பி.எல். வழியாக அடுத்த சச்சின், கங்குலிகளைத் தேர்ந்தெடுப்பதுதான். ஆரம்பத்தில் பி.சி.சி.ஐ.யின் கவனம் முழுக்கப் பணத்தின் மீது இருந்ததால், ஐ.பி.எல்.லின் ஆதாரமே தீர்த்துப் போய் விடுமோ என்கிற பயம் உண்டானது. ரஞ்சி ஆட்டங்களில் துவம்சம் செய்த ஆகாஷ் சோப்ரா, பார்தீவ் படேல் போன்ற வீரர்கள் ஐ.பி.எல்.லில் பரிதாபமாகக் காட்சியளித்தபோதும் ஆஸ்திரேலிய வீரர்களின் ஆளுமை அதிகமாகியபோதும், இந்தப் போட்டியினால் இந்தியக் கிரிக்கெட் அணிக்கு என்ன சாதகம் என்று யோசிக்க வைத்தது. ஆனால் நாளாக நாளாக உள்ளூர் வீரர்கள் நட்சத்திரங்களாக மின்னத் தொடங்கி, நிம்மதிப் பெருமூச்சை வரவழைத்துவிட்டனர்.



பேட்டிங்கில் அக்மார்க் இந்திய அணி என்று டெல்லி அணியைத்தான் கூற முடியும். எந்த அணியிலும் முதல் மூன்று பேட்ஸ்மேன்கள் பட்டியலில் இந்தியர்கள் கிடையாது. ஆனால், ஷேவாக், கம்பீர், தவான் ஆகிய மூன்று டெல்லி வீரர்களுமே பல மேட்சுகளை முடிக்கப் போதுமானவர்களாக இருந்தார்கள். பந்து வீச்சில் பஞ்சாப் அணி இந்திய அணியைப் பிரதிபலித்தது. ஸ்ரீசாந்த், இர்பான் பதான், வி.ஆர்.வி. சிங், பியூஷ் சாவ்லா, யுவராஜ் சிங் என எல்லாமே பார்த்து ரசித்த முகங்கள்.

சென்னை அணிக்காக ஆடிய டோனியை என்னவென்று சொல்வது? பஞ்சாப்காரரான அவருக்கும் யோ மகேஷ் கதைதான் நடந்திருக்கிறது. யோ மகேஷ் பச்சைத் தமிழன். அவருக்குச் சென்னை அணியில் இடம் அளிக்கப்படவில்லை. சமீபகாலமாக, அவரது பந்துவீச்சு சொல்லிக் கொள்ளும்படியாக இல்லாததால், அவர் மீது சென்னை சூப்பர்கிங்ஸ் அவ்வளவாக ஆர்வம் காண்பிக்கவில்லை. இதுதான் சந்தர்ப்பம் என்று டெல்லி அவரைத் தத்தெடுத்துக்கொண்டது. மெக்ராத், ஆசிப் உள்ள அணியில் யோ மகேஷின் பந்து வீச்சும் பேசப்படுவது அவரது சாதனைதான். சென்னை அணியின் டோனி, இந்திய ஒருநாள் அணியில் ஆடும் நாள், வெகு தொலைவில் இல்லை என்பது ஒவ்வொரு ஆட்டத்திலும் வெளிப்படுகிறது. சிறப்பான பந்து வீச்சு என்கிற தகுதி மட்டுமில்லாமல் மார்கலுக்கு இணையாக அதிரடி ஆட்டமும் ஆடுகிறார் டோனி. டெல்லிக்கு எதிரான போட்டியில் கடைசி பந்தில் சென்னை அணி ஜெயித்ததற்கு, டோனியின் கடைசி ஓவரும் சிக்ஸரும் ஃபோரும் முக்கியக் காரணம். இதுதவிர சுரேஷ் ரைனா, பத்ரிநாத் மிகுந்த நம்பிக்கை அளிக்கிறார்கள். இந்த இளம் வயதில் இப்படிப்பட்ட உருவத்தை வைத்துக் கொண்டு ரைனா அடிக்கும் சிக்ஸர்களைப் பார்த்து, புஜபலம் கொண்ட ஹேடன் மலைத்துப் போய்விட்டார். பத்ரிநாத்தின் நீண்ட நாள் உழைப்பு அவருக்கு இப்போது கைகொடுத்திருக்கின்றது. எல்.பாலாஜியின்







புனர் ஜென்மம், இந்திய வேகப் பந்து வீச்சின் கூடாரத்தை மேலும் பலப்படுத்துகிறது.

இரு அணிகளிலும் இந்தியத் திறமைகள், பளிச்சிடவே செய்கின்றன. 20-20 உலகக் கோப்பை போட்டியின் இறுதி ஆட்டத்தில் சிறியதாகப் பங்களித்த யூசுப் பதான், ராஜஸ்தான் அணியில் இருந்து கொண்டு ருத்ரதாண்டவம் ஆடுகிறார். உலகின் மிகச் சிறந்த 20-20 ஆட்டக்காரர் என்று கௌதம் கம்பீரைச் சொல்லும் அளவுக்கு நேர்த்தியாக ஆடிக் கொண்டிருக்கிறார் அவர். கொல்கத்தாவின் டிண்டா, ராஜஸ்தானின் ஜடேஜா, மும்பை வீரர்களான நாயர் மற்றும் குல்கர்னி என ஆங்காங்கே ஏராளமான திறமைகள் பளிச்சிடுவது ஐ.பி.எல்.லின் நோக்கத்தை உறுதிப்படுத்தியுள்ளது.

சச்சின் ஓய்வு பெற்ற பிறகு இந்திய [illegible] மற்றும் 20-20 அணியில் இடம் பெறக்கூடியவர்கள்:

சேவாக், கௌதம் கம்பீர், ரைனா, யுவராஜ் சிங், பத்ரிநாத், ரோஹித் சர்மா, உத்தப்பா, டோனி, இர்பான் பதான், ஜாகிர் கான், இஷாந்த் சர்மா, பிரவீன் குமார், டோனி, ஹர்பஜன் சிங், பியூஷ் சாவ்லா, யோ மகேஷ், யூசுப் பதான், ஆர்.பி.சிங், ஸ்ரீசாந்த்.

எதிர்காலம் என்னவாகும் என்று யூகிப்பதற்கில்லை. நிகழ்காலத்தில் அப்பாவை அழைத்துவரச் சொல்லி இம்முறை ஓலை கொடுத்தாகிவிட்டது.

பொதுவாக, பள்ளிக்கூடத்துக்கு அப்பாக்களை அழைத்துச் செல்வது அத்தனை கௌரவமான செயல் அல்ல. குற்றச்சாட்டுகளைப் படிக்கிற திருவிழா அது. அங்கேயே அடித்து, அங்கேயே திட்டி, தன் மானத்தை மொத்தமாகவும் சில்லறையாகவும் வாங்குவதற்காகவே பிறந்தவன் என்று பட்டம் சூட்டி, தன் தலையில் அடித்துக்கொண்டு, அழுது நாடகம் அரங்கேற்றி ஒரு வழி பண்ணி விடுவார்கள் அப்பாக்கள்.

பத்மநாபனுக்கு, விழப்போகிற அடிகள் பற்றியோ, கேட்கப்போகிற வசவுகள் பற்றியோ பெரிய வருத்தமில்லை. விஷயம் தன் காதல் சம்பந்தப்பட்டது. அப்பாக்களுக்குப் புரிய வைப்பது பெரும் கஷ்டம். முளைத்து மூணு இலை என்று ஆரம்பித்து விட்டால், தையூர் பண்ணையின் பம்ப் செட் மாதிரி பொழிந்துகொண்டே இருப்பார்கள்.

பத்மநாபன் நிறைய பார்த்திருக்கிறான். வெங்கட்ராமன் காதலில் விழுந்தபோது, அவனது அப்பா வந்து அரங்கேற்றிய



7

ஆக்ஷன் காட்சிகள்; துரைராஜின் அப்பா மரத்தில் கட்டிப்போட்டு அடித்த அடிகள்; பாபுவின் அப்பா, ஒரு மாறுதலுக்குத் தன் தலையில் தானே அடித்துக்கொண்டு அழுத காட்சிகள்... இன்னமும் அவன் மனக்கண்ணில் நிற்கிறது.

இத்தனை பாடுகள் படுவதற்காகவாவது எந்தப் பெண்ணாவது காதலை ஏற்றுக் கொள்ளலாம். கேளம்பாக்கம் அரசினர் உயர்நிலைப் பள்ளியில், காதலர்களின் எண்ணிக்கைதான் உயர்ந்துகொண்டே போகிறதே தவிர, ஒரு காதலியும் அவதரித்தபாடில்லை. பெண்கள் காதலித்துத் தொலைத்தால்தான் என்ன?

ராஜலட்சுமி திரையரங்கத்தில், 'அலைகள் ஓய்வதில்லை' ரிலீஸ் ஆனபோது, வளர்மதி புத்தகப் பையில் கார்த்திக்கின் புகைப்படம் இருந்தது. சற்றே கோபமாகவும் கொஞ்சம் ஆறுதலாகவும் இருந்தது அது. கோபம், கார்த்திக்கின் புகைப்படத்துக்காக; ஆறுதல், அந்தக் கதாநாயகனின் இடத்தில், என்றேனும் ஒரு நாள் தன் படத்தை அவள் வைப்பாள் என்று நம்பினான்.

மாமரத்துச் சண்டையின் விளைவாக, அவனுக்கும் பெருமாள் சாமிக்கும் இடையே உண்டாகியிருந்த நிரந்தரப் பகை, பள்ளி முழுதும் பிரசித்தமாயிருந்தது.

''ஒன்ன சும்மா விடமாட்டேண்டா. நீ எப்படி வளர்மதிய லவ் பண்ணிடறேன்னு பாத்துடறேன்'' என்று வெஞ்சினத்துடன் வீரசபதம் செய்துவிட்டுப் போனவன், நேரே தலைமையாசிரியரின் அறைக்குத்தான் சென்றிருக்கிறான்.

உண்மை விளம்பி. ஆனால், பெயருடன். ஆதாரத்துடன்.

''நீங்களே கூப்பிட்டு அந்தப் பொண்ண விசாரிச்சிப் பாருங்க சார். வெளியே சொல்ல பயந்துக்கிட்டு, உள்ளுக்குள்ளாற அழுதுக்கிட்டிருக்குது. என் தங்கச்சி மாதிரி சார்'' என்று அவன் நிகழ்த்திய ஓரங்க நாடகத்தின் விளைவு, அப்பாவை அழைத்துவர வேண்டும்.

ப்ரேயர் முடிந்தவுடன், தன்னை அறைக்கு வந்து பார்க்கச் சொன்ன தலைமையாசிரியர், ''ஒழுங்கா படிக்கப் போறியா? டி.சி. வேணுமா?'' என்று கேட்டார்.

கண்டிப்பாக டி.சி. வேண்டாம். ஆனால், ஒழுங்காகப் படிக்கவும் முடியவில்லை. புத்தகத்தைத் திறந்தாலே வளர்மதியின் முகம்தான் தெரிகிறது. விளையாட்டு பீரியட்களில்கூட, எங்கேனும் கண்ணில் அவள் தென்படுகிறாளா என்று அலைபாய்கிறது. எப்போதும் வகுப்பறையில் பார்வை தன்னிச்சையாக அவள் அமர்ந்திருக்கும் இடத்தில்தான் போய் நிற்கிறது. வளர்மதி... வளர்மதி... வளர்மதி.

ரத்தத்தில் கலந்துவிட்ட ஒரு நல்ல கிருமி. யாரும் எதுவும் செய்துவிட முடியாது.

இரவு, அப்பா வாசலில் உட்கார்ந்து காலை தினத்தந்தியைக் கடன் வாங்கிப் படித்துக்கொண்டிருந்தபோது, அருகே சென்று அமர்ந்தான்.

''என்னடா?''

# காதல் கிலோ காதல் அரை கிலோ கனவு

**பா. ராகவன்**

''ஒரு விஷயம் சொல்லணும்.''

''சொல்லு''

''ஒரு சின்னப் பிரச்னை''

திரும்பிப் பார்த்தார். ''சொல்லு''

''கோச்சிக்கக்கூடாது. திட்டக் கூடாது. அடிக்கக் கூடாது. இப்பவே சொல்லிட்டேன்''

ஆனால், அப்பாவிடம் காதலைப் பற்றி எப்படிப் பேசுவது? அதுவும் முளைச்சி மூணு இலை விடாதவன். இந்த மூன்று இலைகள் என்னென்ன என்று யாரிடமாவது கேட்க வேண்டும். ஏன் நான்காகவோ இரண்டாகவோ அது இல்லை?

''பீடிகையெல்லாம் பலமா இருக்குது? என்னா விசயம் சொல்லு'' என்றார் அப்பா.

பத்மநாபன் தன்னிச்சையாகத் திரும்பிப் பார்க்க, அம்மா அங்கே வந்து நின்றிருந்தாள். ''என்னம்மா?'' என்று கேட்டான்.

''எனக்கு ஒண்ணுமில்ல. என்னிக்குமில்லாத திருநாளா அப்பாவாண்ட உக்காந்து பேசுறியே, என்னான்னு பாக்க வந்தேன்''

அவன் அப்பாவைப் பார்த்தான். இதுவே சந்தர்ப்பம். தவறவிடக்கூடாது. ''அதெல்லாம் பர்சனல். நான் அப்பாவாண்டதான் பேசுவேன். நீ உள்ள போ'' என்று சொன்னான்.

அம்மா அதிர்ச்சியடைந்துவிட்டாள். ''என்னங்க இது! இவனுக்கு என்ன ஆச்சு இன்னிக்கு?''

''டேய், நீ வாடா'' என்று அழைத்துக் கொண்டு வீட்டு வாசலுக்குச் சென்றார். ''இப்ப சொல்லு''

அவன் அதற்குமேல் தயங்கவில்லை. ''தெரியாத்தனமா நா ஒரு பொண்ண லவ் பண்ணிட்டேம்பா'' என்று முதல் வரியில் விஷயத்தை உடைத்தான்.

அப்பா அதிர்ச்சியடைந்தார். ''என்னடா சொல்லுறே?''

''மன்னிச்சிடுங்கப்பா. இதெல்லாம் உங்களுக்குப் பிடிக்காதுன்னு தெரியும். ஆனாலும் தப்பு செஞ்சிட்டேன். உங்களாண்ட சொல்லாம இருக்க வேணாம்னு தோணிச்சி. யாராண்ட வேணா எதவேணா மறைப்பேம்பா. உங்களாண்ட என்னால முடியாது.''

கவனமாகத் தேர்ந்தெடுத்துக் கோத்த வார்த்தைகள். கண்டிப்பாக அப்பா நிலை குலைந்து போவார். சந்தேகமில்லை.

அவர் பேசாமல், நெடுநேரம் அவனையே பார்த்துக்கொண்டிருந்தார். பிறகு சட்டென்று இறங்கிவந்து, ''சரி, என்னா இப்ப?'' என்றார்.

''ஒண்ணுமில்ல. நா லவ் பண்ணது உண்மை. ஆனா அந்தப் பொண்ணுக்கு அதெல்லாம் தெரியாது. நான் சொல்லல. இந்த வயசுல இதெல்லாம் கூடாதுன்னு

**“மற்ற யாரைக் காட்டிலும் சினிமா அதிகம் கடமைப்பட்டிருப்பது ஒளிப்பதிவாளர்களிடம்தான். அவர்கள் கண்கள் பார்த்து முடித்த மிச்ச எச்சத்தைத்தான் நாம் சினிமா என்று பார்க்கிறோம். ஒளிப்பதிவாளர்களை சினிமாவின் கண்கள் எனலாம். உலக அளவுக்குத் தரமான ஒளிப்பதிவாளர்கள் தமிழ் சினிமாவில் இருக்கிறார்கள். ஆனால், எப்பொழுதும்போல யாரும் யாரையும் அங்கீகரிப்பதில்லை. இதுதான் தமிழனின் குறைபாடு. அந்த வகையில் நான் சினிமா பாடலாசிரியர்**



எனக்கும் தெரியும்.''

அவர் பேச்சற்றுக் கேட்டுக்கொண்டிருந்தார்.

''நல்லா படிச்சு முடிச்சி பெரியாளா ஆனப்பறம் பாத்துக்கலாம்னுதான் இருந்தேன். ஆனா ஒருத்தன் ஹெட் மாஸ்டராண்ட என்னப்பத்திப் போட்டுக்குடுத்துட்டான்''

''என்னன்னு?''

''நான் வளர்மதிய லவ் பண்றேன்னு.''

''கர்மம். உங்களுக்கெல்லாம் பள்ளியோடத்துல வேற வேலையே இல்லியாடா?''

''தப்புதாம்பா. மன்னிச்சிடுங்க. நான் யாருக்கும் தெரியாமத்தான் வெச்சிருந்தேன். அவன் குண்ஸா கண்டுபிடிச்சி போட்டுக்குடுத்துட்டான். இப்ப ஹெட் மாஸ்டர் உங்கள இட்டாரச் சொல்றாரு. மெய்யாலே அந்தப் பொண்ணுக்கு இந்த விஷயம் தெரியாதுப்பா. அதுமூலமா தெரிஞ்சி அதுக்கு எதாச்சும் கஷ்டம் வந்துடப்போவுதேன்னுதான் சொல்றேன்.''

''அடி செருப்பால'' என்ற அவரின் சொல்லில், எப்போதுமுள்ள தீவிரம் இல்லை என்பதை அவன் கவனித்தான்.

''நீங்க என்னிய எவ்ளோவேணா இட்டலாம்; அடிக்கலாம்பா. செஞ்சது தப்புதான். அது புரிஞ்சிடுச்சி. இன்னமே செய்யமாட்டேன். இது சத்தியம். ஆனா நாளைக்கு ஹெட் மாஸ்டராண்ட பேசறப்ப அந்தப் பொண்ணக் கூப்ட்டுப் பேச வேணாம்; அதுக்கு ஒண்ணும் தெரியாதுன்றத நீங்க தாம்பா சொல்லணும்.''

தக்க சமயத்தில் கண்ணில் ஒரு சொட்டு நீர் வரவழைத்த கடவுளுக்கு நன்றி.

பத்மநாபன், அவர் கண்ணில் படும்படி தன் கண்ணைத் துடைத்துக்கொண்டு உள்ளே போய்விட்டான். தாங்கமுடியாத மகிழ்ச்சியில் இரவு சீக்கிரமே படுத்துத் தூங்கிவிட்டான்.

மறுநாள் காலை அவன் பள்ளிக்குச் செல்லும்போது அப்பாவை நிமிர்ந்து பார்த்தான். ''பதினொரு மணிக்கா வர்றேன்னு சொல்லு'' என்றார்.

''சரிப்பா'' என்று மட்டும் சொல்லிவிட்டு ஓடியே விட்டான். கவனமாக அம்மாவைத் தவிர்த்தான். அது பற்றிய குறுகுறுப்பு இருந்தது. பிரச்னையில்லை. வந்து பார்த்துக்கொள்ளலாம். ஆனானப்பட்ட அப்பாவையே ஒரு சிறு நாடகத்தில் கட்டிப்போட்டுவிட முடிந்தபிறகு அம்மா எம்மாத்திரம்? ஹெட்மாஸ்டரைச் சமாளித்துவிட்டால் போதுமானது. வீட்டுக்கு விஷயம் தெரியும், மேற்கொண்டு சிக்கல் ஏதுமில்லை என்பதை வகுப்பில் பிரகடனப்படுத்திவிட்டால், பெருமாள் சாமி தன் முகத்தை எங்கு கொண்டு வைத்துக்கொள்வான்?

பள்ளி மணி அடிக்க இருபது நிமிடங்களுக்கு முன்னதாகவே அவன் வகுப்புக்குச் சென்று பையை வைத்துவிட்டு வேகமாக கிரவுண்டுக்குப் போனான். வளர்மதியும் வேறு சில பெண்களும் அங்கே ரைட்டா, ரைட்டு, ரைட்டா, ரைட்டு என்று கட்டம் போட்டு பாண்டியாடிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு கணம் யோசித்தான். சட்டென்று அருகே சென்று, ''வளரு உன்னாண்ட ஒரு நிமிஷம் பேசணும்'' என்று சொன்னான்.

அவள் திரும்பிப் பார்த்த அதே சமயம் ஹெட்மாஸ்டரும் பின்னாலிருந்தபடி அவனையே பார்த்துக்கொண்டிருந்தார்.

(தொடரும்)

என்பதைத் தாண்டி, தமிழன் என்கிற வகையில் அவர்களை மதிக்கிறேன். வணங்குகிறேன்'' என்று Y.M.C.A. மைதானத்தில், தென்னிந்திய ஒளிப்பதிவாளர் சங்கம் ஏற்பாடு செய்திருந்த சாதனையாளர்களுக்கு விருது வழங்கும் விழாவில் பேசினார் கவிஞர் வைரமுத்து. தமிழ் சினிமாவில் மட்டுமல்லாது இந்திய அளவில் மூத்த ஒளிப்பதிவாளர்களை அழைத்து விருது வழங்கியது, வளரும் கலைஞர்களுக்கு உற்சாகமாக இருந்தது!

- கமல்

# எல்லைகளைக் கடந்த எழுத்துக் கலைஞன்!

**க**விஞர் ரவிசுப்ரமணியன் இயக்கியிருக்கும் 'எல்லைகளை விஸ்தரித்த எழுத்துக் கலைஞன்' என்ற ஆவணப் படத்தின் குறுந்தகடு வெளியீட்டு விழாவுக்கு வந்திருந்த பார்வையாளர்கள், உள்ளே இடமில்லாமல், அரங்கத்துக்கு வெளியே நின்றபடி ஜெயகாந்தனின் பேச்சை ரசித்திருக்கிறார்கள்.

செழியனின் கேமரா ஜெயகாந்தனோடு நம்மையும் நடக்க வைக்கிறது; உட்கார வைக்கிறது; பார்க்க வைக்கிறது; எல்லாவற்றுக்கும் மேல் அவர் அருகாமையை உணர வைக்கிறது.

தமது எழுபத்தைந்தாவது வயதைக் கொண்டாடிக் கொண்டிருக்கும் ஜெயகாந்தன், இயல்பு மாறாமல் அப்படியே இருக்கிறார். உற்சாகம், துறுதுறுப்பு, 'கடகட' சிரிப்பு, நகைச்சுவையும் என்னையும் கலந்து மனதுக்குப் பட்டதைப் 'பட்'டென்று போட்டுடைக்கும் சுபாவம்... எதிலும் மாற்றமில்லை.

''நீ தாராளமா இரு. தாராளமா இருக்க அவனுக்குக் கற்றுக்கொடு. நாகரிகத்தைக் கற்றுக்கொடு'' என்கிறார் ஜெயகாந்தன். இலக்கியம், வீடு, உறவினர்கள், நண்பர்களுடனான அவருடைய பிரத்யேக ஜமா, மேடைப் பேச்சு, திரைப்படத்துக்கு அவர் எழுதிய பாடல்கள், அவரது திரைப் படங்கள்... என எல்லாவற்றையும் பதிவு செய்திருக்கிறார் இயக்குநர். இளையராஜாவின் பின்னணி இசை இந்த ஆவணப்படத்துக்கு ஒரு புதிய முகத்தைக் கொடுத்திருக்கிறது.

இசையை ரசிக்கும்போது சூழலையே மறந்துவிடுகிறார் ஜெயகாந்தன். அதேபோல அவருடைய ஊரில் சிறுவர்களுடன் கடற்கரையில் நடந்தபடி, ''நானும் உங்க ஊர்க்காரன் தாம்ப்பா'' என்று பேசும்போது அவரும் ஒரு சிறுவனாக மாறிவிடுகிறார். இப்படி ஜெயகாந்தனைக் குறித்த நுட்பமான பல விஷயங்களைப் படம் வெளிப்படுத்துகிறது.

**- பாலு சத்யா**


• ரவிசுப்ரமணியன்

# கார்ட்டூன் கலாட்டா!

'அடடே!' என்ற தலைப்பில் வெளியான மதியின் தினமணி கார்ட்டூன்களை ஆறு நூல்களாகத் தொகுத்துள்ளது கிழக்கு பதிப்பகம். காஃபி ஷாப் கஸ்டமர்கள் அவற்றுள் தங்களுக்குப் பிடித்தவற்றை இங்கே ருசித்துப் பாராட்டுகிறார்கள்.




என்ன பெரிசு, பையன் டாக்டர் ஆக வேண்டாமா? எம்.பி.பி.எஸ்-க்கு ஒரே ஒரு டிக்கெட் 'பிளாக்'ல இருக்குது வாங்கிக்கிறியா, 40 லட்சம்!

"ஜோக் 'சுர்'ன்னு இன்ஜக்ஷன் போடுதுன்னா, கார்ட்டூன் ஜில்லுனு ஒத்தடம் கொடுக்குதுப்பா!"

- விமலா

காஃபி ஷாப் காஃபி ஷாப் காஃபி ஷாப் காஃபி ஷாப்




ஒத்துக்கறேன் சார், கிலோ 30 ரூபா ஆயிடுச்சு! அதுக்காக, வெங்காயத்தையெல்லாம் 'லாக்கர்'ல வைக்க முடியாது!

"மனசே காதலுக்கான லாக்கர்தான். இந்த கார்ட்டூன படிச்சா காதலாவது கத்தரிக்காயாவதுன்னு சொல்ற பேரன்ட்ஸ்தான் ஞாபகத்துக்கு வர்றாங்க! அதனால பிடிக்குதுப்பா."

- சுதா



பசங்களுக்கு கஷ்டப்பட்டு 'சீட்' வாங்குற பேரன்ட்ஸுக்கு பேங்க் பேலன்ஸ் எப்பவும் ஃபெயில் மார்க்தான் மாப்ப..!






"ரேட்டுல தள்ளுபடி இல்லைன்னாலும் மார்க்குல தள்ளுபடி வந்தாச்சுப்பா! மதி தீர்க்கதரிசிதான்!

- ஹேமா"




விடக்கூடாது... எப்படியாவது எல்லா சீட்டையும் வித்துடணும் சார்!



இதுக்கு நாம என்ன பண்றது, சார்? இவரது டெலிஃபோனை இவரோட வீட்டம்மாவே ஒட்டுக் கேட்கறாங்களாம்.





"இந்த கார்ட்டூனை என்னிக்குப் போட்டார்னு தெரியலை, இன்னிக்கும் பத்திக்கற பிரச்னையா இருக்கு!

- ராஜா"





"அட்டகாசம்! பிச்சைக்காரர் முகத்துல பொங்கற கோபத்தப் பாருங்க - மும்பை செய்தியெல்லாம் ஞாபகம் வருது!

- ஜெயந்த்"

பின்ன என்ன சார், யாரைக் கேட்டாலும் காசு இல்லை, 'க்ரெடிட் கார்டு'தான் யூஸ் பண்றோமென்றான்.





"டபுள் அட்டாக்பா இது - டிமாண்ட் பண்ற ஃபிகர்ங்க, பயந்து நடுங்கற பாய்ஸ் - இரண்டு பேரும் கந்தலாய்ட்டாங்க!

- பத்மாவதி"

சுனாமி இல்லை. 'வாலண்டைன்ஸ் டே' நிதி சார்! இன்னிக்குக் கூட கிஃப்ட் வாங்கிக் கொடுக்க காசு இல்லைன்னு சொன்னா காதலி ரொம்ப கோவிச்சுப்பா, சார்!

"கொஞ்சம் 'ஓவர்' ரகம்னு ஒதுக்கிட முடியாதுங்க... யதார்த்தம் சொட்டுது!

- ராமமூர்த்தி"







முதல்ல இட்லிக் கடைதான் வெச்சிருந்தாராம். பெரிசா லாபம் எதும் வராததால் இப்ப இந்த பிஸினஸுக்கு மாறிட்டாராம்.

"கிரிக்கெட்டுக்கு இதைவிட சூப்பரா விமர்சனம் வைக்க முடியாது தலைவா!

- ஸ்ரீதரன்"











அணியில் தங்களது எதிர்காலம் குறித்து கங்குலி, டெண்டுல்கர், டிராவிட் மூணுபேரும் ஜோசியரிடம் ஆலோசனையாம்! அப்படியே கிரிக்கெட் ரசிகர்களின் எதிர்காலத்தையும் உருப்படுவாங்களா மாட்டாங்களான்னு ஜோசியர் கணிச்சுச் சொல்லிட்டார்னா ரொம்ப நல்லா இருக்கும்!

# நீங்கள்



● தூக்கும் பிரம்மாண்டம்!

● க.வேடியப்பன்,
கும்மிடிப்பூண்டி

? ஐ.பி.எல். போட்டிகளில், இதுவரை பிரபலமடையாமலிருந்த இந்திய வீரர்கள் சிலர் அசத்துகிறார்களே?

! ஆமாமாம்! அவர்களைக் குத்தகைக்கு எடுத்த சில பிரபல தொழிலதிபர்கள்தான் அசடு வழிகிறார்கள்.

● பி.மகேஷ், திருச்சி - 17

? சேது சமுத்திர திட்டமே பயனற்றது என்று சு.சுவாமி கூறுகையில், மாற்று வழியை யோசிக்க மத்திய அரசை உச்ச நீதிமன்றம் அறிவுறுத்தியுள்ளதே?

! திட்டம் பொருளாதார ரீதியில் பயனற்றது என்பது சில அறிஞர்களின் வாதம். ராமர் பாலத்தைத் தகர்க்கக் கூடாது என்பது ராம பக்தர்களின் வாதம். உச்ச நீதிமன்றத்தில் நிலுவையில் உள்ளது பின்னது மட்டுமே. அதன் அறிவுரை ஏற்கத்தக்கது.

● காட்டும் உதாரணம்!

● அகிலா அன்பு மணி, ஈரோடு

? கர்நாடகத்தில் பொறுப்பான, தெளிவான, அமைதியான ஆட்சி அமைக்கப் போவதாக சோனியா கூறியுள்ளது குறித்து...?

! முதலமைச்சர் வேட்பாளர் யார் என்பதையே பொறுப்புடன், குழப்பாமல் தெளிவாகத் தெரியப்படுத்த முடியவில்லை. மெஜாரிட்டி கிடைக்கும் என்கிற நம்பிக்கையும் இல்லை. ஆக, கர்நாடகத்தில் சோனியா பேசிவிட்டுப் போன நாடக

# கேட்டவை - தராசு

டயலாக்தான் இது!

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்

**? தா.கிருட்டிணன் கொலை வழக்கிலிருந்து மு.க.அழகிரி உள்ளிட்டோர் விடுதலை செய்யப்பட்டிருப்பது பற்றி..?**

! ஒன்று, காவல் துறை அரசியல் காரணங்களுக்காகக் கடமை தவறி குற்றமற்றவர்களைக் கைது பண்ணியிருக்க வேண்டும். அல்லது, அரசு வழக்குரைஞர்கள் அதே அரசியல் காரணங்களுக்காகத் தங்கள் கடமை தவறி வழக்கைச் சரியாக நடத்தாமலிருந்திருக்க வேண்டும். எப்படிப் பார்த்தாலும் ஊழல் அரசியல் விளையாடியிருப்பது புரியும்.

● கட்சி நோக்கு!



● டிராமா டயலாக்!

● அதிரை பிறைசாகுல், அதிரை ★

**? மனைவியை 'வாடா, போடா' என்று கூப்பிடுகிறார்களே...?**

! நாவில் ஒட்டியிருந்த 'டி', இதயத்துக்கு இடம் மாறி 'டா'வென விழுகிறது. 'டி'யில் ஆதிக்கம் தெரியும்; 'டா'வில் அன்பு மிளிர்கிறது.

● பழ.கவிதா சிவமணி, புன்செய்ப்புளியம்பட்டி

**? இரண்டு அடி குறளின்படி நடந்தால் இருண்ட வாழ்வே கிடையாது என்று நன்கு தெரிந்தும், நாம் ஏன் அதை முழுவதுமாகப் பின்பற்றுவதில்லை?**

! இரண்டுவரி கஷ்டம்பா-ஒரு வரி ஔவையின் ஆத்திச்சூடியிலிருந்தே ஆரம்பிக்கலாம் - ஆரம்பிக்கக்கூட வேண்டாம். ஒரு வரியே போதும்: 'அறம் செய்ய விரும்பு!'

● மாஜிக்



● ரஞ்சனி ப்ரியன், பள்ளிபாளையம்

**? 'சந்தேகக் கண்ணோடு பார்த்தால் எதுவும் நடக்காது' என்று ராமதாஸுக்கு கருணாநிதி சரமாரி பதிலடி தந்துள்ளாரே?**

! 'யாரையுமே சந்தேகிக்காதவன் விரைவில் ஏமாற்றப்படுவான்' என்பதை ராமதாஸ் தெரிந்திருக்கிறார்; கருணாநிதி மறந்திருக்கிறார்.

● க.நா.இராஜேஸ்வரன், மொரட்டுப் பாளையம்

? நவாப் முகமது அலிக்கு அளிக்கப்பட்டுள்ள 'ஆர்க்காடு இளவரசர்' பட்டத்தையும் சுழலும் சிவப்பு விளக்கு கொண்ட வாகனத்துக்கான அனுமதியையும் ரத்து செய்ய வேண்டும் என்கிறாரே பா.ஜ.க. செயலர் ஹெச்.ராஜா?

! ராஜா என்று கூறும்போது அவர் ராஜாவாகி விடுவாரா என்ன? ராஜா என்கிற பெயருக்கு என்ன மதிப்பு இருக்கிறதோ அதான் இந்த இளவரசர் பட்டத்துக்கும். அதைப் பறிக்க வேண்டும் என்று ராஜா கூறும்போது, மதத் துவேஷ சிவப்பு விளக்கு சுழன்று எச்சரிக்கிறது.



★ ஹிப்னாடிஸம்!

● காயத்ரி நவீன், பெங்களூரு - 57

? ஒப்பிடுக - மாஜிக், ஹிப்னாடிஸம்

! மாஜிக் : அழகிரி விடுதலை!

ஹிப்னாடிஸம் : டி.ஆர்.பாலு பதவியில் நீடிப்பது.

● எம்.சண்முகம், கொங்கணாபுரம்

? 'குருவி' படம் இன்னொரு 'கில்லி'யா தராக?

! உயர உயர பறந்தாலும்...!

● சி.பூங்கோதை, சென்னை - 78

? அணுசக்தி உடன்பாட்டுக்கு எதிர்ப்பு தெரிவித்து வரும் பா.ஜ.க., மீண்டும் ஆட்சிக்கு வந்தால் அணுகுண்டு சோதனை நடத்தப்படும் என்கிறாரே அத்வானி?

! அணுசக்தி ஒப்பந்தத்தில் அணு ஆயுத தயாரிப்புக்குக் கட்டுப்பாடு இருப்பதால் இப்படிப் பேசுகிறார். பின்னது இன்றி முன்னதைப் பெற முடியாது. விவகாரத்தில் நாட்டு நலனைவிட கட்சி அரசியலே தூக்கலாகத் தெரிகிறது.

● ச.நாகரத்தினம், திருப்பூர் ❒

? பத்து திரைப்படங்களுக்கு உண்டான பணத்தைச் செலவழித்து, ஒரு படத்தில் ஒரு நடிகர் பத்து வேடங்களில் நடிப்பது சாதனைதானா சார்?

! சாதனை என்பதற்கான அளவுகோல் மனிதர்களிடையே வேறுபடும். என்னைப் பொறுத்தமட்டில், பிரம்மாண்டமும் ஏராள செலவும் கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸும் சாதனைகள் அல்ல. நல்ல திரைக்கதை, நல்ல மெஸேஜ், நல்ல நடிப்பு, டைரக்ஷன் - இவையே சாதனைகள்.

● சாமி, திருவண்ணாமலை

? மகளிருக்கு 33 சதவிகித இட ஒதுக்கீடு மசோதா...?

! நிறைவேறுமானால் பெண் குலத்துக்கு இழைக்கப்பட்ட 67 சதவிகித அநீதி!

● ஜி.சுந்தரராஜன், சென்னை - 42

? மேற்கு வங்க மாநில ஆளுநர்

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
ச.நாகரத்தினம்,
திருப்பூர்

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
பிறைசாகுல்,
அதிரை




அகஸ்தியர் பதிப்பக உரிமையாளர் எஸ்.கோபாலகிருஷ்ணன்
இல்லத் திருமணம் சென்னையில் விமரிசையாக நடைபெற்றது.
திருமதி ஷோபிதா பாலாஜி, ஸ்பின்கோ பயோடெக் நிறுவன இயக்குநர் திரு சந்திரசேகரன்,
திருமதி காயத்ரி சந்திரசேகரன், மணமகள் இந்துமதி, மணமகன் கிரிஷ்,
திருமதி சுதா கோபாலகிருஷ்ணன், அகஸ்தியர் எஸ். கோபாலகிருஷ்ணன்,
பாலாஜி ஆகியோர் படத்தில் உள்ளனர்.

---

கோபாலகிருஷ்ண காந்தி, ராஜ்பவனில் இரண்டு மணி நேர மின்வெட்டைத் தாமே முன் வந்து அறிவித்ததை, மார்க்ஸிஸ்ட் கட்சித் தலைவர்கள் கடுமையாகக் கண்டித்ததுடன் ஆளுநர் பதவியே அவசியமில்லை எனவும் கூறியது சரியா?

! நல்ல எண்ணத்துடன் சீரிய வழி காட்டியவருக்கு வீண் கண்டனம்! அதே கட்சியின் பிரகாஷ் காரத், அதே செய்தியை வரவேற்று தமிழகத்திலிருந்தபோது பேசியிருக்கிறார். ஆளுநர் பதவி, தேவையான ஒன்று என்பதை சமீப மேற்கு வங்க நிகழ்வுகளே உணர்த்தும்.

✱ சுழலும் சிவப்பு விளக்கு!



● பி.செந்தில்வேலன், அறந்தாங்கி

? தமிழக பள்ளிகளில் லேப்டாப்பில் பாடங்களைப் பதிவு செய்து வழங்குவார்களாமே? இது பயன் தருமா?

! லேப்டாப் எல்லா மாணவர்களுக்கும் அல்ல; பரிசோதனை முயற்சியாக சில இடங்களில் மட்டுமே அறிமுகமாகியுள்ளது. அது கிடைக்கப்பெறாத மாணவர்கள் ஏக்கப்படக்கூடும். நிற்க; புத்தகச் சுமையைக் குறைக்க வழி, பாடத்திட்டத்தைச் சீரமைப்பதுதானேயொழிய, லேப்-டாப் வினியோகமல்ல. அது லஞ்ச ஊழலை, லேப்டாப்பில்கூட கணக்கிட முடியாத அளவுக்குப் பெருக்கும்! ●

பெருமான் ஐந்து நிலைகளில் நமக்கு ஸேவை சாதிக்கிறான் - வைகுண்டத்திலே **பரரூபம்** - பரவாசுதேவனாக ஸேவை சாதிக்கிறான்; பாற்கடலிலே **வ்யூக** (சயன) ரூபம்; ராமன் கண்ணனாக அவதாரம் எடுக்கிறபோது **விபவ ரூபம்**; நமக்குள்ளே உறைகிற நிலையில் **அந்தர்யாமி**; பலப்பல கோயில்களிலே விக்ரஹ ரூபத்தில் **அர்ச்சை.**

திருக்குறுங்குடியின் ஒரு சிறப்பு - இந்த ஐந்து நிலைகளிலேயும் அவன் காட்சி தருவதுதான் என்பதைப் பார்த்தோம். இவற்றுள் அந்தர்யாமி நிலையின் வடிவமாய் அவனைக் காண திருக்குறுங்குடியையொட்டிய மலை மேல் ஏறிச் செல்ல வேண்டும். இந்த மலை மேல் நம்பிக்கு ரிஷீகேசன் என்று பெயர். ஹ்ருஷீகம் என்றால் புலன். ஈசன் என்றால் அவற்றை அடக்கி ஆள்பவன். நம்முடைய புலன்களையெல்லாம் அடக்கி ஆள்பவன், நமக்குள்ளேயே உறைபவன் இந்த மலைமேல் நம்பியான ரிஷீகேசன்.

ரிஷீகேசன் உறையும் மலைக்கு ஏறி வருவதே நாம் பெற்ற பெரும் பேறு. இங்கே ஸிந்து நதி என்று பெயர் பெற்றிருக்கிற நம்பியாறு ஓடுகிறது. அதைச் சுற்றிப் பரந்து - விரிந்திருக்கிற மஹேந்திர பர்வதம் - இதெல்லாம் பொதிகை மலையினுடைய தெற்குக் கோடி. இங்கிருந்து இன்னுமொரு இருபது மைல் தொலைவில் இந்த மலைத்தொடர் முடிந்து போகும். அதையும் தாண்டி சற்றுத் தொலைவில் கன்னியாகுமரி வரும்.

இந்த இடத்துக்கும் ஸ்ரீ ராமாயணத்துக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. ஹனுமான், மாதா ஸீதாவைத் தேடி இலங்கைக்குப் போக வேண்டும்; திரும்ப வர வேண்டும். கடலைத் தாண்டுவதற்கு ஓரிடத்திலேயிருந்து தாவ வேண்டும். அப்படித் தாவிய மலைதான் மஹேந்திர கிரி. இந்த மலையைச் சுற்றி ஏழு முகடுகள் இருக்கின்றன. அதில் ஒரு சிகரத்திலிருந்துதான் 'கிடுகிடு'வென வளர்ந்தார் ஹனுமான். ஸ்ரீராம நாமத்தைச் சொல்லிக்

# ராமாயணமும்



கொண்டு, அதன் மஹாத்மியத்தாலே தன் உருவத்தைப் பெரிதாக்கிக்கொண்டு அதி வேகமாக ஆகாய வெளியிலே புறப்பட்டுப் போனார். இது அத்தனையும் நடந்தது மலைமேல் நம்பியான ரிஷீகேசன் உறையும் இந்த மஹேந்திர கிரியில்தான்.

கேரளா பக்கத்திலிருந்து ஓடி வருகிற படியால் ஸிந்து நதியில், மூலிகைகளின் நற்பண்புகள் அத்தனையும் கலந்து வருகின்றன. இந்த ஸிந்து நதியிலே நீராடி, இங்கேயே சிறிது நேரம் இருந்து நம்பியை ஸேவித்தோமானால் இயந்திரத்தனமான வாழ்க்கையிலிருந்து பெரும் விடுதலை கிட்டும். எப்பவும் சலசலவென்று ஓடிக் கொண்டிருக்கிற ஆறு. குளிர்காலம் என்றால் வெதுவெதுப்பாகவும் வெயில் காலமென்றால் குளிர்ந்தும் இருக்கிற ஆற்று நீர். நீராடிவிட்டு இங்கேயே சிற்றுண்டியையும் - சுடச்சுட பொங்கலோடு கொத்ஸு - எடுத்துக்கொண்டு, அப்படியே மலைமேல் நம்பியையும் ஸேவித்து...



# கண்ணனைத் தேடி...5

நீராட்டம், உணவு, ஸேவை என்று மூன்றும் சேர்ந்து இங்கே அமையுமானால், இங்கேயே இருந்துவிடலாம் என்று தோன்றும்.

இந்த நம்பி ஆற்றுக்கு மேலே பெரிய பாறை ஒன்று இருக்கிறது. அந்தப் பாறையைத் தாண்டி நாம் அதன் மறுபக்கம் செல்ல வேண்டும். கொஞ்சம் கஷ்டப்பட்டு ஏறி, சுமார் மூன்று மைல் நடந்து போனோமானால், அங்கே ஓர் அழகான ராம-லக்ஷ்மண-ஸீதை விக்ரஹம் இருக்கிறது. அதன் வழியாகத்தான் நம்பியாற்றுத் தண்ணீர், அவர்களுடைய திருவடிகளில் பட்டுச் சலசலத்து கீழே வருகிறது. இங்கிருந்து இலங்கைக்குத் தாவிச் சென்ற

# ரிஷீகேசனும்

வேளுக்குடி ஸ்ரீ க்ருஷ்ணன் சுவாமிகள்

ஹனுமான் திரும்பி வந்தார், எல்லோரு டனும் கூடிப் பேசினார். ஸ்ரீராமனிடம் போய்ச் செய்தி தெரிவிக்க கிஷ்கிந்தைக்கு எல்லோரும் புறப்பட்டார்கள்.

கிஷ்கிந்தை என்பது கர்நாடகா மாநி லத்தில் உள்ள ஹம்பி - ஹாஸ்பெட். இங்குதான் ராமனும் சுக்ரீவனும் காத்தி ருந்தார்கள். திருக்குறுங்குடி மலை மேல் நம்பி கோயில் என்பது திருநெல்வேலிக் கும் தெற்கே. இங்கிருந்துதான் மொத்த மேற்குத் தொடர்ச்சி மலைத் தொடரையும் தாண்டிச் சென்று கர்நாடகத்தில் பாதி தூரத்தைக் கடந்து, ஹம்பிக்குப் பக்கத்திலே போய் செய்தி சொன்னான் ஹனுமான்!

அங்கிருந்து மொத்த குரங்குப் படையும் - எழுபது வெள்ளம் வானர சைன்யம்! - நாடு நகரங்களுக்குள்ளே போனால் தொந்தரவாக இருக்கும் என்பதால், மலைத் தொடர்ச்சி மூலமாகவே தெற்கு கடற் கரைக்குச் செல்லவேண்டும் என்று




ஸ்ரீராமன் ஆணையிட்டான். ஹம்பி தாண்டி யவுடனே சஹ்யாத்ரி மலை இருக்கிறது. அதனுடைய மேற்குப் பக்கத்திலிருந்து ஆரம்பித்து வந்தது சைனியம். சஹ்யாத்ரி மலை ஓரமாக வந்து, குடகு மலை (காவிரி உற்பத்திஸ்தானம்) அருகிலே நாகர் ஹோலே என்கிற மலைக்கணவாய் வழியே வந்தது. (இன்று நாகர்ஹோலே ஒரு முக்கிய வன சரணாலயம் - சுற்றுலா தலம்). நாகர்ஹோலேவில் லக்ஷ்மண தீர்த்தம் என்கிற சுனை உள்ளது. இங்கே மஹேந்திர கிரியாகக் காட்சியளிக்கும் மலைத்தொடர்தான் அங்கே சஹ்யாத்ரி வரை நீடிக்கிறது. லக்ஷ்மண தீர்த்தம் உள்ள மைசூர் வனப் பிரதேசம் மூலமாக கீழிறங்கி, நீலகிரி மலைத் தொடரினுடைய மேற்குப் பக்கமாக மீண்டும் ஏறி, அங்கி ருந்து திருநெல்வேலிக்குத் தெற்கே உள்ள மஹேந்திர கிரி அளவுக்கும் வந்தது வானர சைன்யம். மஹேந்திர கிரியைத் தாண்டித் தான் கிழக்குப் பக்கம் சைன்யத்துடன் இறங்கியிருக்கிறான் ஸ்ரீராமன். இறங்கிய பின் திருச்செந்தூர், தூத்துக்குடி ஓரமாகத் தேடியபடி சென்று, திருப்புல்லாணிக்கு அருகிலே சமுத்திரத்தைக் கடப்பதற்குச் சௌகரியமான ஓர் இடத்தைக் கண்டெடுத் தார்கள்.

இது அத்த னையும் வால்மீகி ராமாயணத்திலே நுட்ப மாக விவரிக்கப்பட்டுள்ள ஆதா ரங்கள். ஆகையால், மஹேந்திர கிரி பர்வதம் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. ஸ்ரீ ராமாவதார சம்பந்தம் மட்டு மல்ல, இந்த க்ஷேத்திரம் வராஹ அவதார சம்பந்தமும் உடையது. கைசிக மஹாத்மியம் பற்றிச் சொன்னேன் அல்லவா, அந்த மஹாத்மியம் வராஹ புராணத்திலே தானே இடம்பெறுகிறது? ஆகவே வராஹ அவதார சம்பந்தம். அதோடு, பரசுராமர் ஸ்ரீராமனிடத்திலே தோற்றார் என்பது தெரியும். அந்தப் பரசுராமர் தமது தவ வலிமை அத்தனையையும் இழந்து மறுபடியும் தவம் இயற்றுவதற்காக, இந்த மலைச்சாரலின் மேற்குப் பக்கத்திலேதான் வந்து அமர்ந்தார். ஆகவே அந்த சம்பந் தமும் மஹேந்திர கிரி பர்வதத்துக்கு உண்டு. க்ஷேத்திரமே வாமன க்ஷேத்திரம். கீழேயுள்ள கோயிலில் பெருமானே வாமன

மூர்த்தியாய்த்தான் ஸேவை சாதிக்கிறான்! ஆதலால், வாமனாவதார சம்பந்தம்... இன்னும் சொல்லச் சொல்ல, சொல்லி மாளாத பெருமைகள் வாய்ந்தது இந்தப் பர்வதம்.

தினப்படி காலை அர்ச்சகர் ஸ்வாமிகள், சிப்பந்திகள் கீழேயிருந்து மேலே ஏறித்தான் வரவேண்டும். ஆனாலும், அனைத்து உத்ஸவங்களும் பெருமாளுக்குக் கோலாகலமாக நடக்கும். அவற்றிலே ரொம்ப முக்கியமான உத்ஸவம் ஐந்தாம் திருநாள். அன்றைக்கு திருக்குறுங்குடியின் ஐந்து பெருமான்களுக்கும் கருடஸேவை நடக்கிறது. ஸ்ரீவில்லிபுத்தூர், மதுரை கூடலழகர் பெருமான் கோயில்களிலும் ஐந்து கருட ஸேவை ஒருசேரக் காண முடியும். ஆழ்வார்திருநகரியிலோ ஒன்பது கருட ஸேவை!

ஐந்து நம்பிகளும் கருட வாகனத்தில் ஆரோகணித்து வருவது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்.

இந்தத் திருக்குறுங்குடி நம்பியைக் குறித்து, நாயிகா பாவத்தில் ஆழ்வார் உருகிப் பாடிய ஒரு பாசுரம் ரொம்பவும் சுவையானது :

**கையுள் நன்முகம் வைத்து**
**நையுமென்று**
**அன்னையரும் முனிதிர்;**
**மை கொள் மாடத் திருக்குறுங்குடி**
**நம்பியை**
**நான் கண்டபின்.**

என்று பாடுகிறார்.

''நம்மாழ்வார் (பராங்குச நாயகி), சாயங்கால வேளையிலே வாசல் படியிலே உட்கார்ந்து கன்னத்தில் கையை வைத்துக் கொண்டிருந்தாராம். நம்பியைக் குறித்த ஏக்கத்தில் வாட்டமுற்றிருந்தாராம். அப்போது அவர் தாயார் வந்து கன்னத்திலிருந்து கையை நீக்கச் சொல்லவும், 'என் கையை என் கன்னத்தில் வைத்திருக்கிறேன்; இதனால் உனக்கென்ன சிரமம்?' என்று கேட்டிருக்கிறார்!

அதற்குத் தாயார் பதில் சொல்



கிறாள் :

'யார் கையும் கன்னத்தில் படக்கூடாது; உன் கையும் கன்னத்தில் படக்கூடாது.' இதற்கு உள்ளுறைப் பொருள் :

நம் கைதானே நம் மேல் படுகிறது என்று நினைத்துக்கொள்கிறோம். ஆனால் நம்மாலே நம்மைக் காத்துக்கொள்ள முடியாது. பெருமாளே எல்லோரையும் காக்கிறான்.

நமக்குத் தோன்றும், 'பிறரைக் காக்கும்படி நாம் கேட்கவில்லையே, நாமேதானே நம்மைக் காக்க முயற்சி எடுக்க வேண்டும்' என்று தோன்றும். முயற்சி எடுக்கத்தான் வேண்டும். ஆனால் அந்த முயற்சியும் அதன் பலனும்கூட அந்த நம்பி அருளியவைதான். இந்த ஞானம் நமக்கு ஏற்படுமேயானால், நம்மை ஒரு குழந்தைபோல் அந்த நம்பியின்பால் ஒப்புவித்துக்கொள்வோம். அவனும் நம்மைத் தாயாகிக் காப்பான்.

(தேடுவோம்)





● உத்தப்புரம்

''பதினைஞ்சு வருஷத்துக்கு முன்னால எல்லோருமா பேசி முடிவெடுத்துதான் இந்தச் சுவரைக் கட்டினாங்க. அப்ப தீண்டாமைச் சுவரா தெரியாதது, இப்ப மட்டும் எப்படித் தெரியுது? ரெண்டு சமூகத்துக்குள்ளேயும் சண்ட, சச்சரவு வரக் கூடாதுங்கறதுக்காக, ஒரு பாதுகாப்புக்குத்தான் இந்தச் சுவரைக் கட்டினாங்க. இந்தப் பஞ்சாயத்துகூட 'ரிசர்வ்'தான். அப்படியிருக்கும்போது எங்களால அவங்களுக்குத் தொந்தரவுன்னு சொல்றது எப்படிங்க நியாயம்? எங்களோட பட்டாவுல இருக்குங்க இந்தச் சுவரு. இதை இடிச்சது ஏத்துக்க முடியாதுங்க'' என்று கோபத்துடன் பேசினார் வெள்ளாளர் சமூகத்தைச் சேர்ந்த முருகேசன்.

''ஊரு உலகத்துல எவ்வளவோ மாற்றம் வந்துடுச்சுங்க. ஆனா, இந்த உத்தப்புரத்துல மட்டும் மேல்சாதி, கீழ் சாதிங்கற பாகுபாடு குறையலீங்க. இவுங்க எங்கள படுத்துற பாடு இருக்கே. அது கொஞ்ச நஞ்சமில்லீங்க. ஊருக்குள்ள இருக்கற சலூன் கடைக்குப் போக எங்களுக்கு அனுமதியில்ல. அவுங்க வாழ்ற பகுதிக்குள்ளேயும் போக முடியாது.. ஊருக்குள்ள பஸ் ஸ்டாப்புக்கு மூணு மைல் சுத்தித்தான் போகணும். இப்படி எல்லாத்திலேயும் ஒதுக்கி வைக்கிறதோட இல்லாம, ஊர் எல்லையில இருக்கிற முத்தாலம்மன் கோயிலுக்கும் எங்கள விட மாட்டேங்கறாங்க... இதுக்கெல்லாம் அடிப்படை இந்தச் சுவருங்க. இதை நிரந்தரமா இடிச்சாத்தான் எங்களுக்கு ஒரு விடிவு வருமுங்க. இப்பத்தான்... இந்தச் சுவர இடிச்சிருக்காங்க... இனி என்ன நடக்குதுன்னு பார்ப்போம்'' என்கிறார்கள், சுவர் உடைப்பு போராட்டத்தைத் தலைமையேற்று நடத்திக்கொண்டிருக்கும் தலித் சமூகத்தைச் சேர்ந்த பொன்னையனும், சங்கரலிங்கமும்.

கிட்டத்தட்ட 15 வருடங்களாக உத்தப்புரத்தில் 'தலித்' மக்கள், போதிய அடிப்படை வசதிகள் இல்லாமல் இந்தச் சுவரால் தனிமைப்படுத்தப்பட்டு வந்துள்ளனர். 'வயிற்று வலி' என்றாலும் உடனே மருத்துவமனைக்குச் செல்ல முடியாது. ஐந்து கிலோமீட்டர் சுற்றித்தான் போக வேண்டும். இல்லையென்றால் ஒற்றையடிப் பாதைதான். இந்நிலையில் இந்தத் தடுப்புச் சுவரை இடிக்க வேண்டும் என்று மாவட்ட நிர்வாகத்துக்குப் பலமுறை கோரிக்கை வைத்து வந்தனர். ஜூனியர் நாளிதழில் இச்செய்தி பெரிய அளவில் வெளியான பிறகு, மாவட்ட நிர்வாகம் சுவரை இடிக்க உத்தரவு பிறப்பித்தது. காவல்துறை பாதுகாப்போடு பொதுமக்கள் தடுப்புச்சுவரை இடித்துள்ளனர். இதனைக் கண்டு கோபமடைந்த வெள்ளாளர் சமூகத்தைச் சேர்ந்தவர்கள், ''சுவர் எங்கள் பட்டா நிலத்தில் கட்டியிருக்

# இன்னும் உடையாத சுவர்!

கோம்'' என பதில் கொடுத்த தோடு, தங்கள் ரேஷன் கார்டு

இ மலையில் முகாம்!

களை எல்லாம் மாவட்ட நிர்வாகத்திடம் திருப்பிக் கொடுத்துவிட்டு, தாளையூத்து மலையில் குடும்பத்தோடு சென்று தங் கினார்கள். அதேநேரத்தில் மதுரை சுற்று வட்டார கிராமங்களில் வெள்ளாளர் சமூ கத்துக்கு ஆதரவாக, பிற பிற்படுத்தப்பட்ட சமூகங்கள் கண்டன ஊர்வலங்களை நடத்தி வருகின்றன. இந்நிலையில் போலீஸ் பாதுகாப்பு பலப்படுத்தப்பட்டுள் ளது. ''எப்போது வேண்டுமானாலும் கல வரம் வெடிப்பதற்கான சூழ்நிலை நிலவு கிறது'' என்கிறார் கிராம நிர்வாக அதிகாரி நாகசுந்தரம்.

இந்தச் சுவர் இடிப்புச் சம் பவம் குறித்து சட்டமன்றத்தில் பேசிய முதல்வர், ''உத்தப்புரம் இனி உத் தமபுரம்'' என்று முழங்கியிருக் கிறார். ''தீண்டாமைக்கு எதிரான மிகப் பெரிய வெற்றி'' என் கிறார் மார்க்ஸிஸ்ட் பொதுச்செயலர் பிரகாஷ் காரத். இப்போதைக்கு இந்தச் செயல்பாடுகளும் இந்த 'கமெண்ட்'களும் பரபரப் பாக இருக்கலாம். எட்டு நாள் போராட்டத்துக்குப் பிறகு மலை வாசத்தை முடித்து மக்கள் ஊர் திரும்பியுள்ளனர் - அரசு கொடுத் துள்ள சில வாக்குறுதியை நம்பி.

ஆனால், இரு சமூகம் ஒற்றுமை யாக வாழ இது மட்டும் போது மானதா என்பதுதான் இப்போது எழுந்துள்ள கேள்வி. இரு சமூகத்துக்குள் ளும் 'மன' நெருக்கத்தை உருவாக்க வேண் டிய பொறுப்பு அரசுக்கும் ஏனைய அமைப்புகளுக்கும் இருக்கின்ற நிலையில், அரசும் சரி, பிற அமைப்புகளும் சரி, அவசர ஆத் திரத்தில் இந்த விவகாரத்தை அணுகு கின்றன என்றே தோன்றுகிறது.

செய்தியும் சித்திரமும் :

**லெக்ஷ்மி சரவணக்குமார்**



## 'ஹிந்து' ராம் என்ன சொல்கிறார்?

**உ**ள்ளதை உள்ளபடியே எழுதியிருந்தார் நிருபர் கார்த்திகேயன். தலித்துகளுக்கு எதிராக நடக்கும் கொடுமையாகவே இதை நாங்கள் பார்த்தோம். இப்போது ஒரு முடிவு ஏற்பட்டிருப்பது மகிழ்ச்சியே. இந்த விஷயத்தில் யாரும் அரசியல் செய்யக்கூடாது என்பது என் வேண்டுகோள். தமிழக அரசு இவ்விஷயத்தை பாராட்டும்படி யாக கையாண்டு இருக்கிறது. இந்தச் சமூகத்தில் தலித்துகளுக்கு உரிய கௌரவமும் அங்கீகாரமும் அளிக்கப்பட வேண்டும் என்பதில் இரு வேறு கருத்து இருக்க முடியாது. அதே சமயம், அதற்கான அவசியத்தை மற்ற சமூகத்தினருக்கும் உரிய வகையில் புரிய வைக்க வேண்டியது தமது கடமையாகும். தலித்துகளும் தங்கள் பொறுப்பை உணர்ந்து நடந்துகொள்ள வேண்டும். - ப்ரியன்

# தாலாட்டு வழக்கு!



மக்களிசைப் பாடல்களை நாட்டுப்புறப் பாடல்கள் எனச் சொல்வது பொருத்தமானதன்று. ஊருக்குப் புறத்தே ஒதுக்கிய நிலத்தைப் புறம்போக்கு நிலம் என்று சொல்கிறார்கள். நாட்டுக்குப் புறத்தே ஒதுக்கியது நாட்டுப்புறமா? இது இன்னும் ஆராயப்பட வேண்டும். ஒருவர் சொல்லி இன்னொருவர் அதைச் செவிவழி கேட்டு, தன்னுடைய அனுபவங்களையும் கற்பனையையும் சேர்த்து வாய்மொழி இலக்கியமாக வெளிப்படுத்துவது மக்களிசைப் பாடல். தென்னையிலிருந்து பெறப்படும் நீர், மொந்தையில் விழுந்தால், அது கள்ளாகிறது; சுண்ணாம்பு தடவிய பானையில் விழுந்தால் அதுவே பதநீர் ஆகிறது. அதைப்போல அவரவர் கற்பனைத் திறனுக்கேற்றவாறு மக்களிசைப் பாடல்கள் வெளிப்படுகின்றன.

அனைத்துவிதமான இசைக்கும் ஆரம்பம் மக்களிசை. இரண்டாம் நூற்றாண்டில் எழுதப்பெற்ற சிலப்பதிகாரத்துக்கும் முன்பிருந்தே மக்களிசை வழங்கப்பெற்று வருகிறது. சிலப்பதிகாரத்தில் உள்ள பண்ணத்தி, ஆலத்தி, கந்துவரி, கானல்வரி பாடல்கள் அனைத்தும் மக்களிசைப் பாடல்கள்தாம். ஏழு முதல் பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை உள்ள தேவாரம், திருவாசகம் ஆகியவற்றின் பெரும்பான்மையான பண்கள், மக்களிசையில் காணப்படுகின்றன. திருவாசகத்தில் இருக்கும் 'தாயுமிலி தந்தையிலி தான் தனயன் ஆனேன்' என்று துவங்கும் பாடலில், வரிகள் திரும்ப வருதல் மக்களிசைப் பாடல்களில் கையாளப்படும் முறைதான்.

*'ராசாத்தி உன்ன எண்ணி*
*ராப்பகலா கண் விழிச்சேன்!*
*ராப்பகலா கண் விழிச்சேன்*
*ராணி உன்னைக்*
*கைப்புடிச்சேன்!'*

தாலாட்டுப் பாடல்கள் பற்றிப் பார்ப்போம். தால் என்றால் நாக்கு. நாக்கை ஆட்டிப் பாடுவதால் அது தாலாட்டு; லொலலலலாய்... என்று நாக்கைச் சுழித்துச் சுழித்துப் பாடுவது. தாலாட்டில் பாடப்பெறும் ஆராரோ ஆரிரரோ என்னும் சொற்களுக்குக்கூட பொருள் உண்டு. ஆர் ஆரோ (யார், யாரோ), ஆர் இவர் ஆரோ (யார், இவர் யாரோ) என்பதாக அமைகின்றன. தாய் தன் பிள்ளையைப் பார்த்து, 'முற்பிறவியில் நீ யாராக இருந்தாய்? இப்பிறவியில் நான் தாய், நீ பிள்ளை. நீ யாராக வளர்வாயோ? 'யார் இவர்' என்று ஊர் மெச்சும்படி வாழ்வாயோ?' என்று தாய் கேட்பதாகப் பொருள்படும்.

புஷ்பவனம் குப்புசாமி - அனிதா குப்புசாமி

## மனசெல்லாம் மண்வாசம் - 7

*'யார் அடித்தார் ஏன் அழுதாய்*
*எங்கள் குல ரத்தினமே*
*அடித்தாரைச் சொல்லி அழு*
*ஆக்கினைகள் செய்திடுவோம்'*

என்று தாய் பாட, அதற்குத் தந்தை,

*'ஆரும் அடிக்கவில்லை*
*அஞ்சு விரல் நோகவில்லை -*
*அவன்*
*தம்பி துணை வேண்டுமென்று*
*அழுவுறாண்டி...'*

பின்பு ஏன் மக்கள்தொகை பெருகாது?!

*'மாமன் அடித்தாரோ*
*மல்லிகைப் பூச் செண்டாலே*
*அத்தை அடித்தாளோ*
*அரளிப்பூச் செண்டாலே!'*

மாமனுக்கும் அத்தைக்கும் கொடுக்கும் மரியாதையைக் கவனியுங்கள். மாமனுக்கு மணக்கும் மல்லிகைப்பூ. அத்தைக்கு விஷச் செடி அரளிப்பூ! அத்தை, தாய்க்கு நாத்தனார். யாருக்குத்தான் நாத்தனாரைப் பிடித்திருக்கிறது? அதனால்தான் அரளிப்பூ!

நடுத்தரக் குடும்பத்தில் 'சங்கினால் பால் கொடுத்தால், சந்தன வாய் நோகு மென்று தங்கத்தால் சங்கு செய்து தந்தாரோ தாய்மாமன்' என்று பாடப் படும் தாலாட்டுப் பாட்டு, ஏழைக் குடும்பத்தில் ஏழ் மையின் நிலை யைப் பிரதி பலிப்பதாய்,

*'பசும்பாலு ஊட்டி உந்தன்*
*பசி தீர்க்கப் பார்த்தாலும்*
*பருத்தி விதை இல்லையம்மா*
*பசு பாலு தரலையம்மா!*
*ஆட்டுப்பால் ஊட்டி உன்னை*
*ஆதரிக்கப் பார்த்தாலும்*
*ஆடு கடிக்கும் மரம் - கண்ணே*
*அத்தனையும் மொட்டையம்மா!'*

என தாய் பாடுகின்ற இந்தத் தாலாட்டின் மெட்டு மட்டும்தான் குழந் தைக்கு. புகுந்த வீட்டில் பிரச்னையைக் கணவனிடம் சொன்னால், அவன் கழுவுற மீனில் நழுவுற மீனாக இருக்கிறான். பிறந்த வீட்டுக்கும் போக முடியாது. பிறர் வீட்டுப் பெருமையும் பேச முடியாது. அக்கம் பக்கமோ அதற்கு மேல். கோயிலுக்குப் போய்க் குறை சொல்லி அழுதால், குருக்கள் கத்துகிறார். பிறகு, யாரிடம் சொல்லி அழ? இவற்றுக்கெல்லாம் ஒரே மருந்து குழந்தையின் பிஞ்சு முகம்தான். பிள்ளைக்குச் சொல்வது போல் பிறருக்குச் சொல்லுகின்ற உத்தி அது. அன்றாடம் ஆயிரம் சண்டைகள் வந்தாலும், ஆசைப் பட்டு பிள்ளை பெற்றுக் கொள்வதன் ரகசியம் இதுதான்.

படங்கள் : **ஸ்ரீஹரி**

**(அடுத்த வாரம் அனிதா குப்புசாமி)**



# திமுதிமுவென வந்த நான்கு பேர்!

தேவன் அறக்கட்டளை விருது வழங்கும் விழா. நாடகக் கலைஞர்கள் சி.வி.சந்திரமோகன், எஸ்.அனந்தகிருஷ்ணன் இருவருக்கும் தேவன் நினைவு விருதும் பதக்கங்களும் அளித்தார் நாரத கான சபா செயலாளர் கிருஷ்ணசாமி. நாடகக் கலை அன்றும் இன்றும் என்ற தமது தலைமையுரையில், இன்றைய நாடகங்கள் வெறும் துணுக்குத் தோரணங்களாகிவிட்ட சோகத்தை விமர்சித்தார். இதன்பின் அரங்கேறிய 'நட்டகல்' நாடகமோ, சிறந்த நாடகம் எப்படி அமைய வேண்டும் என்பதற்கான செயல்முறை விளக்கமாக இருந்தது.

மேடையில் ஒளி மங்கி நாடகம் தொடங்கியபோது, 'திமுதிமு' என்று நான்கைந்து பேர் அரங்குக்கு வெளியேயிருந்து கூச்சல் போட்டபடி உள்ளே வர, பார்வையாளர்கள் அரை நிமிடம் குலை நடுங்கித்தான் போனார்கள். பிறகுதான் அந்த வருகை நாடகத்தின் ஓர் அங்கம் என்று உணர்ந்தார். அத்தனை யதார்த்தமான நாடக ஆக்கம்! கலா நிலையம் தயாரிப்பான இதனை இயக்கியவர் கே.எஸ்.என். சுந்தர்.

பூசலார் நாயனார் மனக் கோவில் கட்டிய பெரிய புராணத்தின் அருமையான 'சிறுகதை'யை, இன்றைய பிரச்னைகளுக்கு ஏற்ப 'நட்டகல்' ஆக்கியிருக்கிறார், இந்திரா பார்த்தசாரதி.

காடவர்கோன் என்ற ராஜா வேடத்தில் வந்த முத்துக்குமாரின் கம்பீரமான தோற்றத்தை விஞ்சியது அவரது நடிப்பாற்றல். ராணி வேடத்துக்குச் 'சான்ஸ் வங்கும்' நாகரிக ஜீன்ஸ் யுவதியாக வந்து ஹேமலதா, அமைச்சராக வந்து ஆமாம் போட்ட கரூர் ரங்கராஜன் மனத்தை நிறைத்தனர்.

ஒரு நல்ல நாடகம் அரைமணி நேரத்துக்குள் ஆழ்ந்து சிந்திக்க வைக்க முடியுமானால் வேறென்ன சிறப்பு வேண்டும்! பார்வையாளர்களிடையே அமைதியாக வீற்றிருந்தார் இ.பா.

— சுப்ர.பாலன்



● விருது பெறும் கலைஞர்கள்

எதிர்ப்புற அட்டையில் 'நட்டகல்' நாடகக் காட்சி. படம் : யோகா

இந்தியாவின் No.1 டீலர்

# வசந்த் & கோ

# கோடைகால

# கூல் ஆஃபர்

## (தள்ளுபடி விலைகளில்)

## மிகக் குறைந்த விலைகளில்

அனைத்து முன்னனி நிறுவனங்களின் ஏசிகள்

குறிப்பிட்ட பிராண்ட் Split மற்றும் Window ACகளுக்கு Standard **Installation** இலவசம்

**1 EMI** மட்டும் செலுத்தி ONIDA XARIA LCD TV உடன் Tata Sky மற்றும் Trolley Bag எடுத்துச் செல்லுங்கள்

0% Processing Fee Buydown Interest

Godrej Frost Free Refrigerator உடன் Bajaj Mixi மற்றும் தங்க நாணயம் இலவசம்

குறிப்பிட்ட பிராண்ட் LCDகளுக்கு Tata Sky இலவசம்

எளிய தவணை முறை வசதி

இலவசம் தங்க நாணயம்

0% வட்டி

LG | SAMSUNG | PHILIPS | BPL | SONY | ONIDA | VOLTAS | TCL